# அம்புலிமாமா



மதிமுகம் : 103 நவம்பர் 2000 புன்னகை : 5

## பொருளடக்கம்





### குழந்தைகள் தினம் சிறப்புப் பகுதி





### தீபாவளி சிறப்புப் பகுதி







### சிறப்பு









### போட்டிகள்



Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K Press Pvt. Ltd., Chennai-600 026 on behalf of Chandamama India Limited, New 82 (Old 92), Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor: Viswam

நீங்கள்

அயல்நாடுகளில்
உள்ள உங்கள்
உறவினர், நண்பர்களுக்கு.



# அம்புலிமாமா

இதழை அவர்கள் விரும்பும்
மொழியில் கொடுங்கள்

**அஸ்ஸாமி, வங்காளம், ஆங்கிலம், ஹிந்தி, குஜராத்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு**

அயல் நாட்டிலும் தாய்நாட்டில் உள்ள
மகிழ்ச்சியை அவர்கள் அனுபவிக்கட்டும்

## சந்தா விவரம்

எல்லா நாடுகளுக்கும் விமானத்தபாலில்
பன்னிரண்டு பிரதிகளுக்கு ரூ.900.

இந்தியாவில் தரைவழித் தபாலில்
பன்னிரண்டு பிரதிகளுக்கு ரூ.120.

நீங்கள் செலுத்தும் பணத்தை டி.டியில் அல்லது மணியார்டரில் **'சந்தமாமா இந்தியா லிமிடெட்'** என்ற பெயர் எழுதி அனுப்பவும்

முகவரி :
**பதிப்பகப் பிரிவு**
**சந்த மாமா இந்தியா லிமிடெட்**
82, டிபென்ஸ் அதிகாரிகள் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை - 600 097.


ஆசிரியர்
**விஸ்வம்**



எல்லாக் கடிதப்
போக்குவரத்திற்கும்
சந்தமாமா
பத்திரிக்கைப் பிரிவு
சந்தமாமா பில்டிங்ஸ்
82, டிபென்ஸ்
அதிகாரிகள் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல்,
சென்னை - 600 097.
டெலி/ பேக்ஸ்
4841778/4842087
ஈமெயில் சந்தமாமா
@விஎஸ்என்எல்.காம்


அமெரிக்காவில் தனிப் பிரதி 2
டாலர்கள் வருட சந்தா : 20 டாலர்கள்

பணம் அனுப்ப
வேண்டிய முகவரி:
**இந்தியா அப்ராட்**
43, வெஸ்ட் 24வது தெரு
நியூயார்க், என்.ஒய்.10010
டெலிபோன் : (212)929-1727
பேக்ஸ் : (212) 627-9503



நிறுவியோர்

பி.நாகிரெட்டி சக்கரபாணி

## குழந்தைகள் மாதத்தில் வெளிப்படையாகக் கூறுவது

நவம்பர் மாதம் குழந்தைகள் மாதமாக நம் நாட்டில் கருதப்படுகிறது. இம்மாதத்தில் குழந்தைகளில் நலனுக்கும் முன்னேற்றத்திற்கும் வழிகள் காணப்படும் என்றே பொதுவாக எல்லோரும் எண்ணுகிறார்கள்.

பெரியவர்கள் என்னதான் திட்டங்களை வகுத்துக் கொடுத்தாலும் அவற்றின்படி நடக்க வேண்டியவர்கள் சிறுவர், சிறுமியர்தானே, பெரியவர்கள் அல்லவே. அதனால் சிறுவர்களுக்கு எது நல்லது என்பதை அச்சிறுவர்களே தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

இதை சிறுவர்கள் எவ்வாறு தேர்ந்தெடுப்பார்கள்? இன்றைய உலகம் எப்படி உள்ளது? வன்முறையும் பயங்கரச் செயல்களாலும் நிரம்பியுள்ளது. இம் மாதிரி தாறுமாறாகிக் கிடக்கும் உலகைத்தான் அவர்கள் கண்டு வருகிறார்கள். இந்த நிலை ஏற்படக் காரணம் ஒரே ஒரு தவறு செய்யப்பட்டதாலே. அது என்ன? மனிதன் அதிகார பலத்தாலும் பணபலத்தாலும் எதையும் அடைந்து விடலாம் என நினைப்பது தான். இதனால் அரசியல் துறையிலும் வணிகத்துறையிலும், மத சம்மந்த விஷயங்களிலும் போட்டா போட்டிகள் கடுமையாக நடக்கின்றன. பணமோ அதிகாரமோ மனநிறைவையும் சுகத்தையும் தந்து விடாது. மனதில் மகிழ்ச்சி ஏற்படுவது ஒருவரது மனசாட்சியின்படி நடப்பதிலும், நேர் நடத்தையிலும் அதன் அடிப்படையில் செல்வதிலும்தான் உள்ளது. அதாவது வெளியார் தலையீடு எதுவும் இல்லாமல் உங்களால்தான் உங்கள் மனமகிழ்ச்சியையும் நிறைவையும் அடைய முடியும். இவற்றை வேறு யாராலும் ஏன், உங்கள் பெற்றோர்களாலும் கூட உங்களுக்குக் கொடுக்க இயலாது.

உங்கள் மீது முழு நம்பிக்கை வைத்தே உங்கள் பத்திரிகை இதை வெளிப்படையாக ஒளிவு மறைவின்றி கூறியுள்ளது. ஏனெனில் அது உங்கள் மீது முழு நம்பிக்கை வைத்துள்ளது.



# செய்திச் சுடர்

## புதுவிதமாய்க் காப்பாற்றியது!



டேவிட் என்ற பதிநான்கு வயதுச் சிறுவன் நீரில் மூழ்காமல் தப்பியது புதுவிதமாய். பிலிப்போ என்ற கடல்வாழ் டால்பின் தென் இத்தாலியில் டேவிட் படகிலிருந்து அலையால் அடித்து நீரில் தள்ளப் பட்டு மூழ்கும் நிலையில் இருக்கையில் தன் முதுகால் தூக்கி அவனது படகினருகே கொண்டு சென்றது. அப்படகிலிருந்த அவனது தந்தை அவனது கால்களைப் பற்றி இழுத்துத் தன் படகினுள் சேர்த்தார். அப்பகுதியிலுள்ள மீனவர்கள் அந்த டால்பினுக்கு பிலிப்போ என்ற பெயரைச் சூட்டிப் பாராட்டினார்கள்.

## காக்கப்படும் வரை காத்திருந்தான்!

கேரளாவில் 14வயதுச்சிறுவன் அக்பர்தன் பள்ளியிலிருந்து வந்து மதிய உணவைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது தன் பக்கத்து வீட்டு நண்பன் கூக்குரலிடுவது கேட்டு ஓடி வந்தான். 25அடி ஆழக்கிணற்றில் இரண்டுவயதுக் குழந்தை விழுந்துவிட்டதே அக்கூச்சலுக்குக் காரணம். அக்பர் கிணற்றில் எட்டிப் பார்த்தபோது அந்த குழந்தை தத்தளிப்பது கண்டு சட்டெனக் கிணற்றில் குதித்து அக்குழந்தையைப் பிடித்து எடுத்துக் கொண்டு கிணற்றிலுள்ள இரும்புக் குழாயை ஒருகையால் பிடித்துக் கொண்டான். இதற்குள் கிணற்றைச்சுற்றிக் கூட்டம் கூடிவிட்டது. ஒருவர் கயிற்றில் கட்டிய வாளியை கிணற்றில் அக்பரருகே மிதக்கவிட்டார். அக்பர் தான் பிடித்திருந்து குழந்தையை அந்த வாளிக்குள் வைக்கவே வாளிமேலே இழுக்கப்பட்டு குழந்தை காப்பற்றப்பட்டது. அக்பர் மிகவும் களைத்துப்போனது கண்டு சிலர் நாற்காலியை கயிற்றில் கட்டி கிண்ற்றுள் விடவே அக்பர் அதில் உட்கார்ந்து கொண்டான். அவனையும் மேலே இழுத்துக் காப்பாற்றினார்கள். அக்பரின் இந்தத் துணிகரச் செயலுக்கு வீரவிருது அளிக்கலாம் அல்லவா?



## ஒரு சிறுமி யானைப் பாகன் !



கேரளாவில் திருச்சூர் அருகே திருப்பரலாரிலுள்ள ஸ்ரீ கிருஷ்ணா என்ற 10அடி உயர 31 வயதான ஒரு யானையை விஜயலட்சுமி என்ற 12 வயதுச் சிறுமி அடக்கிக் கண்காணித்து வருகிறாள் என்று கூறினால் ஆச்சரியப்படத்தானே படுவீர்கள். இதனை அசோக்குமார் என்பவர் பீகார் மாநிலத்திலிருந்து கொண்டுவந்தார். இந்த யானையை நடத்த ஹிந்தியில் சொற்களைக் கூறினால்தான் அதன்படி நடக்கும் என்று தெரிந்தது. அசோக்குமாருக்கும் அங்கிருந்த மற்றவர்களுக்கும் ஹிந்தி தெரியாததால் என்ன செய்வதென விழித்தனர். அப்போது அசோக்குமாரின் 12 வயது மகள் விஜயலட்சுமி ''அப்பா! பள்ளியில் நான் ஹிந்தி படிப்பதால் நான் ஹிந்தியில் 'சல்' 'உட்' 'பைட்' என்று சொல்லிப் பார்க்கிறேன். ஒரு வேளை அதை எல்லாம் கேட்டு அதன்படி நடக்கலாம்'' என்றாள். அவளது தந்தையும் அப்படியே கூறிப் பார் எனவே விஜயட்சுமியும் அவ்வார்த்தைகளைக் கூறவே யானையும் அதன்படி நடந்தது. இப்போது விஜயலட்சுமி தான் அதற்கு யானைப்பாகன் போல இருக்கிறாள்.

## பற்களின் பலம்



மத்தியப் பிரதேசத்து தாடியாவைச் சேர்ந்த சீமாபடோரியாவிடம் போய் ''நீங்கள் எந்தப் பற்பசையை உபயோகிக்கிறீர்கள்என்று கேட்க ஆவல் கொள்வீர்கள். ஏனென்றால் அவர்தம் பற்களால் ஒரு ஆகாய விமானத்தைப் பற்றி இழுத்து விடுவாராம். அவர்பத்தாவது வகுப்பில் படித்து வரும் மாணவியாம். இந்தச் செயலை அவர்போபாலில் பைராகட் விமானநிலையத்தில் செய்து காட்டினார். அந்த விமானம் 14இருக்கைகள் கொண்ட அரசாங்க விமானம். இனிஅதைவிடப்பெரிய போயிங் 747 விமானத்தையும்தம்பற்களால்பற்றிஇழுத்துக் காட்டப் போகிறாராம். இவரது சாதனைகின்னஸ் புத்தகத்தில் இடம் பெறத்தக்கது தானே!

## அன்று இம்மாதத்தில் பிறந்தவர்

நேருமாமா என்றும் சாச்சா நேரு என்றும் சிறுவர் சிறுமியர்களால் செல்லமாக அழைக்கப்படும் பண்டித ஜவாஹர்லால் நேரு சுதந்திர இந்தியாவின் முதலாவது பிரதமமந்திரியாக இருந்தவர். 1889 நவம்பர் 14ல் இவர் அலகாபாத்தில் பிறந்தார். குழந்தைகளை இவர் மிகவும் நேசித்ததால் இவர் பிறந்த நாளை குழந்தைகள் தினமாகக் கொண்டாடுகிறார்கள். இது 1957லிருந்து தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

பதினான்கு வயதுவரை இவர் கல்வி பயில இவரது தந்தை மோதிலால் நேரு வீட்டிலேயே ஏற்பாடு செய்தார். அதன் பின் லண்டன் அருகேயுள்ள ஹாரோ பள்ளியில் சேர்க்கப்பட்டார். பின் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்று பாரிஸ்டராகி 1912ல் இந்தியாவிற்குத் திரும்பி வந்தார். அவர் தந்தையின் வழக்கறிஞர் தொழிலையே இவரும் மேற்கொள்வார் என எல்லோரும் எதிர்பார்த்தார்கள். ஆனால் இவர் தீவிரமாக அரசியலில் ஈடுபட்டார்.



ஜவாஹர்லால் நேரு

இவருடைய வாழ்க்கையில் 1916ல் இரு முக்கிய நிகழ்ச்சிகள் நடந்தன. ஒன்று இவர் கமலாதேவியை மணந்தது. மற்றது லக்நௌவில் நடந்த இந்திய தேசிய காங்கிரஸ் மாநாட்டில் காந்திஜீயால் கவரப்பட்டது. இதன் பின் இவர் முழுக்க முழுக்க அரசியலில் ஈடுபட்டார்.

ஜாலியன் வாலாவில் 1918 ஏப்ரல் 13ல் டையர் என்பவன் ஈவிரக்கமின்றி அங்கு கூடிய ஆண்களையும் பெண்களையும் தன் வீரர்களோடு வந்து சுட்டுக்கொன்றான். இதில் நானூறு பேர் இறந்தனர். ஆயிரத்திற்கும் மேற்பட்டவர்கள் காயமுற்றார்கள். ஜவாஹரும், சி.ஆர். தாசும், காந்திஜீயும் இப்படுகொலை பற்றி விரிவான விசாரணை நடத்தி பிரிட்டிஷ் ஆட்சியையே நாட்டை விட்டு அகற்றுவது என்று முடிவு செய்தார்கள்.

இதன்பிறகு இவர் 1928ல் இந்திய தேசிய காங்கிரசின் பொதுச் செயலாளர் ஆனார். அடுத்த ஆண்டில் அதன் தலைவராகவும் ஆனார். ஒத்துழையாமை, மற்றும் பல இயக்கங்களில் பங்கேற்று பல தடவைகளில் சிறையும் சென்றார். பல முறை காங்கிரசின் தலைவராகவும் இருந்திருக்கிறார். 1931ல் இவர் தம் தந்தையையும் பின்னர் தம் மனைவியையும் 1938ல் தம் தாயார் சுவரூபராணியாரையும் இழந்தார்.

இவர் 1947ல் சுதந்திர இந்தியாவின் பிரதமமந்திரியாகி 1964 வரை தொடர்ந்து அப்பதவியை வகித்து இந்தியாவின் எதிர்காலத்தை நல்ல விதமாக உருவாக்கினர். 1964 மே 27ல் இவர் அமரரானார்.

இருபதாம் நூற்றாண்டின் சிறந்த ராஜதந்திரியாயும், உலகில் அமைதியை நிலைநாட்டப் பாடுபட்டவரான இவர் சிறந்த எழுத்தாளர். இவரது 'சுயசரிதம்', டிஸ்கவரி ஆஃப் இந்தியா' 'கிளிம்ஸஸ் ஆஃப் வேல்ட் ஹிஸ்டரி' என்பன குறிப்பிடத்தக்க நூல்களாகும்.

வேதாளம் சொல்லும் கதை

# உயர்ந்த தர்மம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதுஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச்செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னா! இந்த பயங்கர நள்ளிரவில் நீ இப்படி விடாப்பிடியாக முயல்வதைப் பார்த்தால் நீ பாவங்களைப் புரிந்து அவற்றைப் போக்க தானதர்மம் என்று புண்ணிய காரியங்களைச் செய்ய பணம் சம்பாதிக்க முயல்கிறாயோ என்ற சந்தேகம் எனக்கு ஏற்படுகிறது. புண்ணியகாரியங்கள் பல செய்து



கொடுக்கவே அவனது அந்த நோய் போய்விட்டது. ஆனால் ஒரு வாரத்திற்குப்பின் அவனது வலது கை செயலிழந்துவிட்டது. அவனால் பேச முடியாதும் போயிற்று.

அது கண்டு குணநிதி மீண்டும் வைத்தியர்களை அழைத்து வரவே அவர்களும் கஜபதியைப் பரீட்சித்துப் பார்த்துவிட்டு அது ஏதோ விசித்திர நோயாக உள்ளது என்றும் அது என்ன நோய் என்று தங்களுக்குத் தெரியவில்லை என்றும் கூறிவிட்டுச் சென்றார்கள். இதனால் யோகிசன்னியாசிகளிடம்காட்டி ஏதாவது பரிகாரம் செய்து பார்க்கலாம் என்று குணநிதி எண்ணினான்.

அப்போது சதானந்தர் என்ற மகான் அந்த ஊருக்கு வந்திருந்தார். குணநிதி அவரைக் கண்டு தன் தந்தையின் நிலையைக்கூறவே அவரும் அவனது வீட்டிற்கு வந்து கஜபதியைப் பார்த்தார். பிறகு அவர் கஜபதியிடம் ''அப்பனே! நீ பல பொய்களைக் கூறி பொய்ப் பத்திரங்கள் தயாரித்துப் பலரை ஏமாற்றி இருக்கிறாய். அதனால் பொய்ப்பத்திரங்களை எழுதிய உன் வலது கை செயலற்றுப் போய் விட்டது. பொய்களைக் கூசாமல் கூறிய உன்வாயால் பேச முடியாது போய் விட்டது. அதனால் பாவங்களால் சம்பாதித்த உன் சொத்தை எல்லாம் துறந்து விட்டாலே நீ குணமடைவாய்'' என்றார்.

சதானந்தர் கூறியதை ஏற்பதாக கஜபதி தலையை ஆட்டினான். உடனே அவர் முன்னிலையிலே தன் சொத்துக்களை எல்லாம் தன் மகன் குணநிதியிடம் ஒப்படைப்பதாக பத்திரம் தயாரிக்கவும்

விட்டதால் மட்டும் செய்த பாவங்கள் போய் விடாது. இதை விளக்க உனக்கு ஒரு வியாபாரியின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

ஒரு ஊரில் கஜபதி என்ற வியாபாரி இருந்தான். அவன் மகாக் கஞ்சன். எச்சில் கையால் கூடக் காக்கையை விரட்ட மாட்டான். பலரை ஏமாற்றியும் பாவச் செயல்களைப் புரிந்தும் பணம் சேர்த்தான். அறுபது வயதடைந்தபோது ஏதோ ஒரு கடும் நோயால் படுத்தபடுக்கையாகக் கிடந்தான்.

இதைக்கண்ட அவனது மகன் குணநிதி நல்ல வைத்தியர்களை அழைத்து வந்து தன் தந்தைக்கு சிகிச்சை செய்யும்படிக் கூறினான். அவர்களும் மருந்துகளைக்

அவன் சம்மதித்தான். பத்திரம் தயாரானதும் கஜபதி அதில் கையெழுத்திடப் போனபோதே அவனது வலதுகை எப்போதும் போலச் செயல்பட்டது. பத்திரத்தில் அவன் கையெழுத்தைப் போட்டதும் அவனால் எப்போதும் போலப் பேசவும் முடிந்தது.

இது கண்டு குணநிதியும் அவனது மனைவியும் இரு புதல்வர்களும் மிக்க மகிழ்ச்சி அடைந்தார்கள். தடபுடலாக விருந்து சாப்பாடு போட ஏற்பாடுகளைச் செய்யலானார்கள். அந்த சமயத்தில் குணநிதியின் மூத்தமகன் தயாநிதி ஆவென அலறியவாறே கீழே விழுந்தான். அவனது வலது கை செயலிழந்தது. அவனால் பேச முடியாதும் போயிற்று.

அது கண்டு குணநிதி கண்ணீர் வடித்த வாறே சதானந்தரிடம் ''சுவாமி! இதென்ன விபரீதம்'' ஏன் இப்படி ஆகிவிட்டது'' என்று கேட்டான். அவரும் ''உன் தந்தை யின் பாவங்கள் நீ அவரது சொத்துக்களை அடைந்ததால் உன்னைப் பற்றிக் கொண்டுள்ளன. அதன் விளைவாக உன் மகன் பாதிக்கப்பட்டிருக்கிறான். நீ அடைந்த சொத்துக்களின் பாவக்கறை யைப் போக்க நீ தான தர்மங்களைச் செய்ய வேண்டும். நீ உன் தந்தை போலல்லாமல் நற்காரியங்களைச் செய்து வந்ததால் நீ நேரடியாக பாதிக்கப்படவில்லை. எனவே உனக்குக் கிடைத்த பணத்தைக் கொண்டு தானதருமங்கள் செய். இதற்கு உன் தந்தை ஒப்பமாட்டான். ஆனால் இப்போது சொத்து உன்னுடையது. உன் தந்தை தான தர்மங்கள் செய்ய இசையாவிட்டால் மீண்டும் அவனது வலதுகை செயல்



இழக்கும், பேச்சும் போய்விடும். அதனால் அவனது பேச்சைக் கேளாமல் நீ தாராளமாக தான தருமங்களைச் செய்து வா. என்று உன் புண்ணியச் செயல்களால் உன் தந்தையின் பாவங்கள் மறைந்து போகின்றனவோ அன்று உன் மகன் குணமடைந்து முன் போலாகி விடுவான். இது தான் கடவுள் அவனுக்கு விதித்தது'' எனக் கூறி விட்டுச் சென்றார்.

தன் பேரன் படும் பாட்டைக் கண்ட கஜபதி தன் மகனிடம் ''என் பேரன் கஷ்டப்படுவதைக் கண்டு நான் சகித்துக் கொண்டு இருக்க முடியாது. என் சொத் தை எனக்குக் கொடுத்துவிடு. நான் பாவங்களின் பலனை அனுபவித்துக் கொள்கிறேன். என் பேரன் குணமடை யட்டும்'' என்றான். குணநிதி இதற்கு



சம்மதிக்காததால் ஊரில் இருக்கக் பிடிக்காமல் கஜபதி தீர்த்த யாத்திரை செய்யப் புறப்பட்டு விட்டான்.

குணநிதி அப்போது முதல் ஏராளமாக தான தர்மங்களைச் செய்து வரலானான். கோவில் கட்டினான். பள்ளிக்கூடங்கள் திறக்க நிதி கொடுத்தான். யார் உதவி கேட்டு வந்தாலும் இல்லையெனாது பணம் கொடுத்து வந்தான். இப்படியே ஓராண்டு கழிந்தது. அவன் செய்து வந்த நேர்மையான வியாபாரத்திலோ லாபம் நிறையக் கிடைத்தும் வரவே தான தர்மங்களைத் தொடர்ந்து செய்து வந்தான். அப்போதும் அவன் மகன் தயாநிதி குணமடையவில்லை. ஆனால் நாடெங்கிலும் குணநிதியின் பெயர் தர்மப்பிரபு என்று பரவிவிட்டது.

இதனால் குணநிதி மகிழ்ச்சி அடைந்து விடவில்லை. தினமும் தன் மகனின் உடல் நிலை எப்படி உள்ளது என்று கவனித்து வரலானான். தயாநிதியின் நிலையில் எவ்விதமாற்றமும் ஏற்படாதிருந்தும் அவன் தான தருமங்களைச் செய்வதை விட்டுவிடவில்லை. அவனது உறவினர் கள்பலர்தானதர்மங்கள்நீண்ட காலமாகச் செய்தும் தயாநிதி குணமடையாததைச் சுட்டிக்காட்டி இனியும் தொடர்ந்து தான தர்மம் செய்வது வீண் என்று சொல்லிப் பார்த்தார்கள். ஆனால் அவர்கள் பேச்சைக் கேளாமல் குணநிதி தொடர்ந்து தர்ம காரியங்களைச் செய்து வந்தான்.

அச்சமயம் அந் நாட்டு மன்னனின் முதுகில் ராஜபிளவை என்ற ஒருவகைப் புண் ஏற்பட்டு சிரமப்படுத்தியது. வைத்தியர்கள் என்னென்னவோ சிகிச்சை செய்தும் அந்தப் புண் ஆறவில்லை. எனவே மன்னன் யோகிகளையும் சன்னியாசிகளையும் வரவழைத்து தன் புண் ஆறுமா எனப் பார்க்கலானான்.

இவ்வாறு மன்னனைக் காண வந்தவர் களில் ஒருவரான சதானந்தர் "அரசே! நீ என்னவோ நல்லவன் தான். ஆனால் மன்னன் என்பதால் உனக்குத் தெரியாம லேயே சில அநியாய காரியங்களைச் செய்திருக்கிறாய். உன்னால் சில குற்றமற் றவர்கள் தண்டனை பெற்றிருக்கிறார்கள். சில குற்றவாளிகள் தண்டனை அடையா மல் தப்பித்திருக்கிறார்கள். இந்தப் பாவச் செயல்களால்தான் உன் முதுகில் பயங்கரப் புண் ஏற்பட்டுள்ளது. இதை எந்த மருந்தினாலும் குணப்படுத்த முடியாது. இந்நாட்டுக் குடிமகன்களில் யாராவது ஒருவன் தன் புண்ணியத்தை மனப்பூர்வமாக உனக்குக் கொடுத்து

விட்டால், அந்த புண்ணியத்தின் அளவு உன் பாவத்தின் அளவிற்கு அதிகமாக இருந்து அதைப் போக்கடித்தால் உன் புண் மறைந்து விடும்'' என்றார்.

மன்னனும் ''சுவாமி! இப்படிப்பட்ட புண்ணியாத்மா என் நாட்டில் யார் என்பதைத் தாங்கள் கூறி அருள்வீர்களா?'' என்று பணிவுடன் கேட்டான். சதானந்தரும் குணநிதியைப் பற்றிக் கூறவே உடனே மன்னன் தன் ஆட்களை அனுப்பி குணநிதியை அழைத்து வரச் செய்தான். குணநிதி வந்ததும் மன்னன் தன் நிலையைக் கூறி சதானந்தர் சொன்னதையும் அவனிடம் தெரிவித்தான்.

குணநிதியும் ''அரசே! நான் செய்யும் தான தர்மங்களால் கிடைத்த புண்ணியத்தால் என் மகன் கொஞ்சம் கூட குணம் அடையவில்லை. நான் இதுவரை அடைந்த புண்ணியம் தங்களுக்குப் பயன்படாதோ என்று அஞ்சுகிறேன்'' என்று பணிவன்புடன் கூறினான். அப்போது சதானந்தர் ''குணநிதி! உன் தந்தையின் பாவங்களை உன் மகன் தயாநிதி ஏற்றுக் கொண்டு விட்டான். அதனால் உன் தந்தையின் சொத்து புனிதமானதோடு உனது தானதர்மங்களின் பலனாக மும்மடங்கு பெருகி விட்டது. எனவே உன் புண்ணியத்தால் எவ்விதப் பயனும் இல்லை என நீ நினைப்பது தவறு'' என்றார்.

அதற்கு குணநிதி ''சுவாமி! நான் பணம் சம்பாதிக்க வேண்டுமென்று எண்ணி தான தர்மங்களைச் செய்யவில்லை. என் மகன் குணம் அடைய வேண்டுமென்றே அவ்வாறு செய்துவருகிறேன்'' என்று சற்று விரக்தியுடன் கூறினான். சதானந்தரும்



''உன் சொத்து பெருகுவதும் அதற்குத் தானே. இப்போது உன்னிடமுள்ள பணம் எல்லாம் உன்னுடையதே என்றாலும் இதில் ஒரு பகுதி உன் தந்தை கொடுத்தது. அதை மும்மடங்காகி ஆக்கி அதிலிருந்து தான தருமங்கள் செய்கிறாய். உன் பணத்தால் நீ அடைந்த புண்ணியம் மன்னனின் முதுகுப் புண்ணைப் போக்கப் போதுமானது'' என்றார்.

அது கேட்டு குணநிதி ஆச்சரியப்பட்டு ''அப்படியா? என் புண்ணியத்தால் மன்னர் குணம் அடைவார் என்றால் நான் மகிழ்ச்சியுடன் மனப்பூர்வமாக அதை அவருக்குக் கொடுக்கிறேன். இதனால் நாடே பயன் பெறும். என் மகன் குணமடைய பல வருடங்களானாலும் பரவாயில்லை'' என்றான்.

சதானந்தர் முன்னிலையில் குணநிதி

யின் புண்ணியம் முறைப்படி மன்னனுக்கு கிடைக்கும்படிச் செய்யப்பட்டது. மறு விநாடியே மன்னனின் முதுகுப்புண்மாய மாய் மறைந்து விட்டது. மன்னன் பெரும் மகிழ்ச்சி அடைந்து ''குணநிதி! நீ என்ன கேட்டாலும் அதைக் கொடுக்கிறேன்'' என்றான். குணநிதியோ'' அரசே! நீங்கள் எனக்கு என்ன கொடுக்க நினைத்தாலும் அதை மக்களின் நலனுக்காகப் பயன் படுத்துங்கள். எனக்கு எதுவும் வேண் டாம். நீங்கள் நலமடைந்து மக்களுக்கு நன்மை புரிவதே எனக்குக் கிடைக்கும் திருப்தி'' என்று கூறி விட்டு மன்னனிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றான்.

குணநிதியுடன் சதானந்தரும் அவனது ஊருக்குச் சென்றார். அப்போது தீர்த்தயாத்திரையிலிருந்து கஜபதியும் தன் ஊருக்கு வந்தான். அவன் தயாநிதி மீது தான் கொண்டுவந்த புனித நீரைத் தெளித்தான். மறுவிநாடியே தயாநிதியின் வலது கை சரியாகியது. அவனுக்குப் பேச்சு வந்துவிட்டது.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! குணநிதி தான தர்மங்கள் செய்து புண்ணியம் பெற்று பெயரும் புகழும் அடைந்தான். ஆனால் அந்தப் புண்ணியம் அவன் மகன் தயாநிதியை குணப்படுத்தவில்லை. ஆனால் பாவியான கஜபதி கொண்டுவந்த கங்கை நீர்தான் குணப்படுத்தியது என்கிறாயா? இதற்குச் சரியான பதில் தெரிந்திருந்தும் நீ பதில் கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''கஜபதி கொண்டு வந்த கங்கை நீரால் தயாநிதி குணம் அடைந்தான் என்பது தவறு. குணநிதி தன்நலம் கருதாமல் பொதுநலம் கருதி தன் புண்ணியத்தை மனப் பூர்வமாகக் கொடுத்ததால் தான் தயாநிதி குணம் அடைந்தான். அவன் குணம் அடையும்போது கஜபதி வந்து கங்கை நீரைத் தெளித்தது காக்கை உட்காரப் பனம்பழம் விழுந்த கதை போலத்தான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக்கிளம்பிப் போய் மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக்கொண்டது.



# திருட்டு போய் விடும்!

மெய்யப்பன் தன் மகனின் திருமணப் பத்திரிகையை ஒரு ஆள் வாயிலாகத் தன் உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் அனுப்பி, திருமணத்திற்கு வரும் பெண்கள் எவ்வித நகையும் அணிந்து வரக்கூடாது என்றும், தன் பகுதியில் திருடர் பயம் இருப்பதால் இப்படிச் செய்ய வேண்டியுள்ளது என்றும் தகவல் கொடுத்தான். அதனால் அத்திருமணத்திற்கு வந்த எந்தப் பெண்ணும் எவ்வித நகையையும் அணிந்து கொண்டு வரவில்லை. திருமணமும் நன்கு நடைபெற்றது.

திருமணத்திற்கு வந்தவர்களெல்லோரும் மெய்யப்பனிடம் விடை பெற்றுக் கொண்டு சென்று கொண்டிருந்தனர். அப்போது ஒரு பெண்மணி அவனிடம் ''பெண்கள் நகைகளை அணிந்து கொண்டு வரக்கூடாது என்றும் இவ்வூரில் திருடர் பயம் உள்ளது என்றும் நீங்கள் எங்களுக்குத் தகவல் அனுப்பினீர்களே. ஆனால் அதுமாதிரி எல்லாம் பயம் இல்லை என்று இந்த ஊரார் கூறுகிறார்களே. நீங்கள் இப்படிப்பட்ட ஒரு தகவலை ஏன் அனுப்பினீர்கள்?'' என்று கேட்டாள்.

மெய்யப்பனும் சிரித்தவாறே ''அதுவா? திருமணத்திற்கு வருபவர்களில் பணக்காரர்களும் இருக்கிறார்கள். ஏழைகளும் இருக்கிறார்கள். பணக்காரப் பெண்கள் தம் நகைகளை அணிந்து கொண்டு கர்வத்தோடு அங்கும் இங்கும் திரிவார்கள். ஏழைப் பெண்களோ தம்மிடம் அப்படிப்பட்ட நகைகள் இல்லையே என்று ஏங்குவார்கள். எல்லோரும் சமநிலையில் இருந்து கூடிப் பேசி மகிழ்ந்திருக்கவே இப்படிச் செய்தேன்'' என்றார்.





# மெய்க் காவலாளி தேர்வு

மருங்காபுரி மன்னர் மாதவசேனர் தமக்கு நம்பகமான ஒரு மெய்க்காவலாளியை நியமிக்க விரும்பினார். வீர, தீரபராக்கிரமும் நல்லறிவும் கொண்டவனை இப்பதவிக்குத் தேர்தெடுக்கும்படி மன்னர்தம் அமைச்சரிடம் கூறினார். அமைச்சரும் இதற்காகப் பல இளைஞர்களைக் கண்டு முடிவில் அப்பதவிக்கு இரு இளைஞர்கள் தகுதிபெற்றவர்கள் என தேர்ந்தெடுத்தார். அவர்கள் விஜயனும், விக்கிரமனும் ஆவர்.

மன்னரும் ''நமக்கு வேண்டியது ஒருவன்தானே'' எனவே அமைச்சரும் ''இந்த இருவருமே அப்பதவியைப் பெற தகுதிபெற்றவர்களே. இவர்களுக்கு ஒரு பரீட்சை வைத்து அதில் தேறுபவனை நியமிப்போம்'' என்றார். மன்னரும் ''நானே அந்தப் பரீட்சையை அவர்களுக்கு வைத்துத் தேர்ந்து எடுக்கிறேன்'' எனவே அமைச்சரும் அப்படியே செய்யுங்கள் எனக் கூறிவிட்டுச் சென்றார்.

மறுநாள் மன்னர் மலைப்பகுதியிலுள்ள மலர்வனத்திற்குச் செல்லும்போது விஜயனைத் தன்னுடன் அழைத்துச் சென்றார். அப்போதைக்கு அவன் தான் மன்னரின் மெய்க்காவலாளி. இருவரும் குதிரைகளின் மீது அமர்ந்து சென்றனர். விஜயன் வில், அம்பு, வாள், ஈட்டி என ஆயுங்களை எடுத்துக் கொண்டு மன்னரின் பின்னால் சென்று கொண்டிருந்தான்.

உச்சி வேளையின்போது அவர்கள் இருவரும் மலர்வனத்தை அடைந்தார்கள். அங்கு அமைக்கப்பட்டிருந்த குடிலுக்குள் மன்னர் சென்று சற்று நேரம் இளைப்பாறிக் கொண்டிருந்தார். அப்போது சில கிராமவாசிகள் ஓடிவந்து மன்னரிடம் ''அரசே! கடந்த இரண்டு நாட்களாக காட்டிலிருந்து ஒரு புலி இரவில் எங்கள் கிராமத்திற்குள் வந்து அங்குள்ள ஆடுகளையும், மாடுகளையும், எருமைகளையும் அடித்துக் கொன்று தின்றுவிட்டுப் போகிறது. இன்றோ அது பட்டப் பகலிலேயே வந்துவிட்டது. இப்போது அது

- சங்கர சுவாமிநாதன்

கிராமத்தையே அலறச் செய்து கொண்டிருக்கிறது. பலர் தம் வீட்டுக் கதவுகளை மூடித்தாளிட்டு உள்ளேயே இருந்து நடுநடுங்கிக் கொண்டிருக்கிறார்கள். நாங்கள் எப்படியோ அந்தப் புலியின் பார்வையில் படாமல் தப்பி ஓடிவந்திருக்கிறோம். அந்தப் புலியைக் கொன்று தாங்கள் தாம் எங்கள் கிராமத்தைக் காக்க வேண்டும்'' என்று வேண்டினார்கள்.

மன்னரும் உடனே ''விஜயா! நீ இந்த கிராமவாசிகளோடு போய் அந்தப் புலியைக் கொன்று விட்டுவா'' என்றார். விஜயனும் ''தாங்கள் கூறியபடியே செய்து விட்டு வருகிறேன். இதற்கு என் ஈட்டி ஒன்றே போதும். வில், அம்பு, வாள் என்றெல்லாம் தேவை இல்லை என் ஈட்டியால் ஓரே குத்தில் அதனை கொன்றுவிடுவேன்'' எனக் கூறிவிட்டு கிராமவாசிகளுடன் கிளம்பிச் சென்றான்.

ஒரு மணிநேரம் கழிந்தது அப்போது விஜயன் கிராமத்திலிருந்து மன்னர் இருக்கும் இடத்திற்கு வந்து அவரிடம் ''அரசே! அந்த புலியைக் காணவில்லை. அதைத் தேடி அலைந்து பார்த்தேன். அது கிடைக்கவே இல்லை. எங்கேயோ ஓடிப்போய் விட்டது'' என்றான். அன்று மாலையே இருவரும் தலைநகருக்கு வந்து விட்டார்கள்.

இதன் பின் ஒரு வாரம் கழிந்தது. மன்னர் அதே மலர்வனத்திற்கு மீண்டும் புறப்பட்டார். இம்முறையில் விக்கிரமனைத் தன் மெய்க்காவலாளியாக அவர் அழைத்து கொண்டு சென்றார். அங்கு அவர் தம் குடிலில் இளைப்பாறிக் கொண்டிருந்தபோது சில கிராமவாசிகள் வந்து ''அரசே! எம் கிராமத்தில் ஒரு புலி இப்போது புகுந்து அட்டகாசம்



செய்து கொண்டிருக்கிறது. நீங்கள் இப்போதே வந்து அதைக் கொன்று எங்களைக் காக்க வேண்டும்'' என்று வேண்டினார்கள்.

மன்னர் அப்போது தன் மெய்க் காவலாளியாக இருக்கும் விக்கிரமனிடம் ''விக்கிரமா! நீ இவர்களோடு போய் அந்தப் புலியைக் கொன்று விட்டுவா'' என்று கூறினார். ஆனால் விக்கிரமன் இருந்த இடத்தை விட்டு நகராமல் அந்த கிராமவாசிகளையே உன்னிப்பாக பார்க்கலானான். அப்போது மன்னர் கோபத்துடன் ''இது என் கட்டளை. உம். உடனே கிளம்பு'' என்றார்.

அப்போது விக்கிரமன் மிகவும் பணிவுடன் ''அரசே! என்னை மன்னியுங்கள். இப்போது என் முதலாவது வேலை தங்களைக் காப்பதே. உங்களை

இங்கே தனியாக விட்டு விட்டு நான் எங்கேயும் போகமாட்டேன். இந்த கிராமவாசிகள் தலைநகருக்குப் போய் சேனாதிபதியிடம் கூறி உதவியைப் பெற்று கொள்ளுமாறு நீங்கள் அவர்களிடம் கூறுங்கள். நான் உங்களது மெய்க்காவலாளி. அதனால் தங்களைவிட்டு ஒரு விநாடி கூடப் பிரிந்திருக்கக் கூடாது'' எனக் கூறினான்.

அப்போது மன்னர் ''இவ்வளவு பேர்களுக்கு முன்னால் என் கட்டளைக்குக் கீழ்ப்படிய மறுக்கிறாயா? இக் குற்றத்திற்கு உனக்கு என்ன தண்டனை கிடைக்கும் தெரியுமா? மரண தண்டனைதான்'' என்று உறுமினார். விக்கிரமனும் ''இப்போது நீங்களிடும் கட்டளைப்படி நான் நடக்க முடியாமல் போவதற்கு என்னை மன்னியுங்கள், என் வேலை அரசரின் மெய்க்காவலாளியின் வேலை. அதைத் தான் நான் முதலில் செய்ய வேண்டும்'' என்றார்.

மன்னரும் வேறு எதுவும் கூறாமல் தான் தலைநகருக்குப் போய் வீரர்களை அனுப்புவதாக மட்டும் கூறிவிட்டு விக்கிரமனுடன் தலைநகருக்குச் சென்றார். அன்றிரவு அவர் அமைச்சரை அழைத்து மலர்வனத்தில் நடந்தவற்றை எல்லாம் விவரமாகக் கூறி ''விஜயனை நம் படையில் ஏதாவது ஒரு பணியில் அமர்த்துங்கள். விக்கிரமனை நான் என் மெய்க்காவலாளியாக நியமித்துக் கொள்கிறேன். என் முடிவு சரிதானே'' எனக் கேட்டார். அமைச்சரும் சிரித்தவாறே ''மற்றவர்கள் தங்கள் முடிவு சரியல்ல என்றும் தங்களது கட்டளைக்குக் கீழ்ப்படிய மறுத்த விக்கிரமனுக்கு மெய்க்காவலாளி ப்தவியா எனக் கேட்பார்கள். ஆனால் தன் உத்தியோகத்தின் பொறுப்பை உணர்ந்து, மரண தண்டனை என்ற அச்சுறுத்தலைப் பற்றிக் கவலைப்படாமல் தன் பணியில் கண்ணும் கருத்துமாக விக்கிரமன் இருந்திருக்கிறான். மெய்க்காவலாளி மன்னரைவிட்டு ஒரு விநாடி கூட பிரிந்திருக்கக் கூடாது என விக்கிரமன் கூறியது சரியே. விஜயன் வீரன் என்றாலும் விக்கிரமனைப் போல சிந்தித்துச் செயல்படவில்லை அதனால் நம் படையில் ஒரு வேலை கொடுத்ததும் சரியே'' என்றார்.

மன்னரும் ''பேஷ்-அமைச்சர் என்றால் அமைச்சர் தாம்'' என அவரைப் பாராட்டினார்.







அன்புமிக்க நண்பர்களே!

அம்புலிமாமா இந்த நவம்பர் 2000 இதழில் ஒரு சிறப்புப்பகுதியை உங்களுக்கு அளித்துள்ளதில் பெரும் மகிழ்ச்சி அடைகிறது.

இந்த இதழில் இந்தியாவின் பலபகுதிக் குழந்தைகள் எழுதிய கதைகள் நாம் நடத்திய போட்டியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டனர். இதற்குப் படங்கள் வரைந்து கொடுத்த சிறுவர்களும் எமது போட்டியில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களே. இவற்றில் வெற்றி பெற்றவர்களை அம்புலிமாமா வாழ்த்துவதுடன் இந்த ஆர்வம் சிறார்களிடம் தொடர்ந்து இருக்கவேண்டுமென விரும்புகிறது.



தேர்ந்தெடுக்கப்படாத படைப்புகளை அனுப்பியோர் மனம் தளர்ந்து விடவேண்டாம். எல்லாப் படைப்புகளும் நன்றாக இருந்ததால் தேர்ந்தெடுப்பதில் நாம் சிரமப்பட்டோம். நாம் நடத்தப் போகும் அடுத்த போட்டிகளில் நீங்கள் கூட் வெற்றி பெறலாம். தவிர்க்க முடியாத காரணங்களாலும், பள்ளித் தேர்வுகளாலும் இப்போட்டிகளில் கலந்து கொள்ள முடியாமல் போன சிறுவர் சிறுமியருக்கு வரும் நாட்களில் நாம் பல வாய்ப்புகளை அளிக்க எண்ணியுள்ளோம்.

இந்த சிறப்பு இதழில் சிறுவர்கள் எழுதிய கதைகளோடு தீபாவளியைப் பற்றிய சில கதைகளும் சில சிறப்பு அம்சங்களும் உள்ளன. இப்பண்டிகை பற்றி சில வார்த்தைகள் கூறுவது பொருத்தமாக இருக்கு மென்று எண்ணியே இதனை அளித்திருக்கிறோம்

உங்களன்புள்ள

விஸ்வம், ஆசிரியர்

# அதிர்ஷ்ட தாயத்து

நித்யா, ஒஹியோ.

Anjul Luniya, Maharashtra

வெகுகாலத்திற்கு முன் ஒரு ஊரில் மீனா என்ற சிறுமி இருந்தாள். அவளுடைய ஊர் இமயமலைக் காடுகளிடையே இருந்தது. மீனாவும், அவள் தங்கை ஹேமாவும் காட்டிற்குள் போய் உணவு, தானியம் சேகரித்து வந்து சமைத்து நோயுற்றுக் கிடக்கும் தம் தாயாருக்கும் கொடுத்துக் குடும்பத்தைக் கவனித்து வந்தார்கள். அவர்களது தாயார் படுக்கையிலிருந்த படியே அவர்களுக்குச் சொல்ல வேண்டியதைச் சொல்லி, வீட்டு வேலைகளைச் செய்யக் கற்றும் கொடுத்து வந்தாள்.

ஒரு நாள் மீனா காட்டில் இலந்தைப் பழங்களைப் பறித்துக் கொண்டிருக்கையில் மரத்தில் ஒரு கிளையில் ஏதோ ஒன்று பளபளவென்று மின்னிக் கொண்டிருப்பதைக் கண்டாள். அது என்ன என்று எடுத்துப்பார்க்கையில் இதய வடிவில் ஒரு சிறு தங்க லாக்கெட் எனக் கண்டு கொண்டாள். அதைத் திறந்தும் பார்த்தாள். உள்ளே எதுவும் இருக்கவில்லை. அதைத்தன் சட்டைக்குள் போட்டுக் கொண்டாள்.

அன்று ஹேமாவின் பிறந்தநாள். எல்லோரும் சாப்பிட உட்கார்ந்தார்கள். மீனாவின் சமையலைப் பாராட்டினார்கள். ஹேமாவிற்குப் பரிசுகள் வந்திருந்தன. அவள் அவற்றிலிருந்து ஒரு அழகிய பேக்கெட்டை எடுத்துப் பிரித்தாள். அதிலிருந்து அழகிய அஞ்சலி பொம்மை வெளிப்பட்டது. அது அழகானது. விலை மதிப்பு உள்ளது. மீனா அதை அளித்தவர் யார் என்று அதில் வைக்கப்பட்டிருந்த துண்டு அட்டையை எடுத்துப் பார்த்தாள். அதில் அவளுடைய தாயாரின் பெயர் இருந்தது.

அவளுடைய தாயார் சிரமப்பட்டு வங்கிக்குப் போய் பணத்தை எடுத்து அந்த பொம்மையை வாங்கிக் கொடுத்திருக்கிறாள்! ஹேமாவும் ''மிக்க நன்றி அம்மா! ஆனால் இதை வாங்க நீ நிறைய செலவு செய்திருப்பாயே! உனக்கு ஏன் அம்மா இவ்வளவு சிரமம்?'' என்று கேட்டாள். அவளது

தாயாரோ ''இதில் என்ன சிரமம் எனக்கு? யாருக்குக் கொடுக்கிறேன்? என் அருமை மகளுக்குத்தானே?'' என்று கூறி அவளைக் கட்டித் தழுவிக் கொண்டாள்.

ஹேமாஇன்னொருபேக்கட்டைஎடுத்துப் பிரித்துப் பார்த்தாள். அதில் ஒருசிறிய இசைப் பெட்டி இருந்தது. அதை மீனாஹேமாவுக்குப் பரிசாக அளித்திருந்தாள். ஹேமா மிகுந்த மகிழ்ச்சியுடன் ''நன்றி அக்கா! அதை நான் பத்திரமாக வைத்துக் கொண்டிரு ப்பேன்'' என்றாள்.

அப்போது மீனா அந்த இசைப் பெட்டியில் சொருகப்பட்டிருந்த சாவியைக் காட்டி ''ஹேமா! நீ இந்த சாவியை இடதுபுறமாகத் திருப்பினால் பெட்டி திறந்து கொள்ளும் அப்போது உள்ளே உள்ள இசைக் கருவியை நீ வாசித்து மகிழலாம் என்றாள். மீனா பரிசு கொடுக்க ப்பட்ட இரு பொருள்களைஎடுத்துக்கொண்டு ''இவற்றை யார் அளித்தது?'' என்று அதில் கட்டப் பட்டிருந்ததுண்டுஅட்டைகளைப் பார்த்தாள். அதில் தாத்தா என எழுதப்பட்டி ருந்தது. மற்றதில்அப்பாஎன்று எழுதப்பட்டி ருந்தது. ஹேமா அதைப் பிரித்துப் பார்த்த போது அதில் இதயவடிவில் ஒரு அழகிய லாக்கெட் இருந்தது. மீனாவுக்குக் கிடைத்த லாக்கெட் போலத் தான் அது இருந்தது. ஹேமா அந்த லாக்கெட்டைத் திறந்து பார்த்தாள். அதனுள் அவளுடையபடமும் அவளுடையதாயாரின் படமும் மீனா வின் படமும், தந்தையின் படமும் இருந்தன. ஹேமா அந்த லாக்கெட்டை எடுத்துத்தன்கழுத்தில் அணிந்து கொண்டாள். அது அவளுக்கு மேலும் அழகைச் செய்தது.

இனி எஞ்சி இருந்தது ஒரே ஒரு பரிசுப் பேக்கட்தான். ஹேமா அதை எடுத்து மெதுவாகத் திறந்து பார்த்தாள். அதனுள் ஒரு பெட்டி இருந்தது. அதில் அழகிய கண்ணாடி டால்பின் பொம்மை இருந் தது. ஹேமாவுக்கு டால்பின் என்றால் மிகவும் பிடிக்கும். அதை அதி ஜாக்கிர தையாக எடுத்துத் தன் தாயாரிடம் கொடுத்தாள். அவளும் அதனை ஹேமாவின் அறைக்குள் கொண்டு போய் வைத்தாள்.




மீனாவும் ஹேமாவும் படுத்துத் தூங்குவதற்குச் சென்றார்கள். மீனா தன் சட்டைக்குள்இருந்த லாக்கெட்டை எடுத்துத் தன் நகைப்பெட்டிக்குள் வைத்துப் பூட்டினாள். பிறகு படுக்கையில் படுத்துப் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டாள். அப்போது ஹேமா ''என்ன அக்கா! இன்று எல்லாம் ஜோராகத்தானே இருந்தது?'' என்று கேட்டாள்.

மீனாவும் ''ஆமாம். ரொம்ப நன்றாகத்தான் இருந்தது. ''சரி. தூங்குவோம். காலை யில் பார்ப் போம்'' எனக் கூறிப் படுத்துத் தூங்கலா னாள். மீனா தனக்குக் காட்டில் கிடைத்த லாக்கெட் டைப் பற்றி எண்ணிய வாறே இருந்தாள். ஆகா! எவ்வளவு அழகு!எப்படித்தான் பளபளவென மின்னியது! அது தனக்குப் பெரும் அதிர்ஷ்டத்தைத் தரும் தாயத்துதான் என அவளது மனம் கூறியது.

# பொறுமை வேண்டும்! ஷீதல் வடகாவே, சதாரா -

அனிலும் சுநீலும் அண்ணன் தம்பிகள். ஏழைக் குடும்பத்தில் பிறந்து திக்கற்ற அவர்கள் தாமே ஏதேதோ வேலைகளைச் செய்து பள்ளியில் சேர்ந்து படித்து வந்தார்கள். அப்படியும் போதிய பணம் கிடைக்காமல் சிரமப்பட்டதால் அவர்களுக்குத் தம் மாமா வின் நினைவு வந்தது. அவர் கொடை வள்ளல் எனப் பெயர் பெற்றிருந்தது கேள் விப்பட்டு, தாம் படிப்பதற்கு பணமில்லாது சிரமப் படுவதாயும், அவர் ஐநூறு ரூபாய் அனுப்பினால் இரு வரது பள்ளிக்குச் செலுத்த வேண்டிய பணமும், புத்தகங் களும், நோட்டுகளும் எழுது கருவிகளும் வாங்கிக் கொள்ள வசதியாக இருக்கும் என ஒரு தபால் கார்டில் எழுதி அவர்கள் அவரது முகவரிக்கு அனுப்பினார்கள்.

Agni Chemburkar, Maharashtra

ஒரு வாரம் கழிந்து, அவர்களுக்கு அவர் களது மாமாவிடமிருந்து நூறு ரூபாய் மணியார்டர் வந்தது. அதைக் கண்ட சுநீல் ''என்ன அண்ணா இது! பெரிய கொடையா ளியா இவர்? மகாகஞ்சன்! ஐநூறு கேட்டால் நூறு அனுப்பி இருக்கிறாரே. பேசாமல் பணத்தைத் திருப்பி அனுப்பி விடு'' என்று பொரிந்து தள்ளினான்.

அனிலோ ''தம்பீ! ஆத்தி ரப்படாதே பொறுமையாக யோசி. நூறு ரூபாய் என்பது நமக்குப் பெயரிய தொகை. இதைச்சம்பாதிக்க நாம் எவ்வளவு சிரமப்பட வேண்டும் தெரியுமா! முன் பின் நாம் பார்த்தி ராத மாமாவுக்கு ஒருதபால் கார்டுதான் எழுதி னோம். அதைக் கண்டதும் அவர் நூறு ரூபாய் உடனே அனுப்பி இருக்கிறாரே! இது அவரது தாராளமனப் பான்மையைத்தானே காட்டு கிறது. இந்தப் பணத்தில் முதலில் பள்ளிக் கூடத்திற்குச் செலுத்த வேண்டிய பணத்தைக் கொடுத்து விட்டுப் பிறகு புத்தகங்கள் எழுது கருவிகள் போன்றவற்றை வாங்கிக் கொள்ள லாம்'' என்றான்

அவர்கள். நன்கு படித்துத் தேர்வில் நல்ல மதிப்பெண் களைப் பெற்றனர். அனில் தம் இரு வரது மதிப்பெண் பட்டியல்களையும் பள்ளி கொடுத்த முன்னேற்ற அறிக் கைகளையும் தன் மாமாவுக்கு அனுப்பி அவர் நூறு ரூபாய் அனுப்பி உதவியதற்கு நன்றி தெரிவித்துக் கடிதமும் எழுதினான்.

அவனது மாமாவும் ''நான் எவ்வள வோ பேருக்கு உதவி செய்திருக்கிறேன். யாரும் அதற்கு நன்றி தெரிவித்துக் கடிதம் எழுதியதில்லை. ஆனால் நீ விவரமாகக் கடிதம் எழுதி உன் நற்பண்பை வெளிப் படுத்தி இருக்கிறாய்'' எனக் கடிதம் எழுதி மூவாயிரம் ரூபாயை அனுப்பி வைத்தார்.

அதன்பின் அவரது உதவியால் அந்த இரு சகோதரர்களும் நன்கு படித்து முன்னுக்கு வந்தார்கள். அனில் டாக்டரானான் சுநீல் பொறியாளர் ஆனான்.




# கெட்டிக்கார சுமன்

ஜி.கே.பிரஸாத்

சிங்கபுரி என்ற சிறிய நாட்டின் மன்னர் சிம்மவர்மன். அந்நாட்டை பலவான்களான இரு அண்டை நாடுகள் இரு முறை தாக்கியும், சிம்மவர்மன் அவற்றைத் தோற்கடித்து விரட்டி விட்டார். ஆனால் இப்போர்களால் நாட்டின் பொருளாதாரம் சீர் குலைந்தது. கஜானா காலியாகி விட்டது.

''நம் நாட்டு குறுமலையின் குகையில் யாரோ ஒரு மன்னர் தான் கைப்பற்றிய செல்வத்தை ஒளித்து வைத்திருக்கிறார். அதை அங்கு யாராவது போய் எடுத்து வந்தால் நம் நாட்டை முன்போல வளமானதாக ஆக்கலாம். ஆனால் அந்த குகைக்குள் சென்ற யாருமே இதுவரை திரும்பி வரவில்லை'' என்றார் அமைச்சர்.

அப்போது மன்னர் ''எனக்குப் பின் நாட்டை ஆள எனக்கு ஒரு குழந்தையும் பிறக்கவில்லை. அதனால் குறுமலைக் குகையின் செல்வத்தைக் கொண்டு வந்து கொடுக்கும் வீரனுக்கு இளவரசுப்பட்டம் கட்டி எனக்குப்பின் அவனே இந்நாட்டின் மன்னவன் என அறிவிக்கிறேன்'' என அந்த அமைச்சரிடம் கூறி அவ்வாறே நாடு முழுவதும் பறை சாற்றுவித்தார்.

இதற்கு ஒரு வாரத்திற்குப்பின் சுமன் என்ற வாலிபன் வந்து மன்னரைக் கண்டு ''அரசே! எனக்கு குட்டிகள் போடும் நிலையிலுள்ள பத்து குதிரைகளைக் கொடுங்கள். நான் அவற்றுடன் அக்குகைக்குப்போய் அங்குள்ள செல்வத்தை எடுத்து வருகிறேன்'' என்றான். மன்னரும் அவன் கேட்ட படியே குதிரைகளைக் கொடுத்து அனுப்பினார்.

அக்குதிரைகளோடு சுமன் சென்றபோது வழியில் அவை

குட்டிகளை ஈன்றன. அக்குதிரைக் குட்டிகளை அங்கேயே விட்டு விட்டு குதிரைகளுடன் எரியும் தீவட்டியை எடுத்துக் கொண்டு அவன் குறுமலை குகைக்குள் சென்றான். குகைக்குள் இருந்த செல்வத்தை அவன் அக்குதிரைகளின் மீது ஏற்றி முடித்தபோது அவன் கொண்டு வந்த தீவட்டி திடீரென அணைந்து விட்டது. அவன் சட்டென ஒரு குதிரை மீது ஏறி அமரவே எல்லாக் குதிரைகளும் குகையிலிருந்து அந்த இருட்டில் ஓடி வெளியேவந்துவிட்டன.

சுமன் அக்குதிரைகளை அரண்மனைக்கு ஓட்டிப் போய் மன்னரிடம் தான் கொண்டு வந்த செல்வத்தைக் கொடுத்தான். அப்போது கிழ அமைச்சர் ''ஆச்சரியமாய் இருக்கிறதே. நீ அந்தக் குகையிலிருந்து எப்படி வெளியே வர முடிந்தது?'' என்று கேட்டார். சுமன் ''நான் குதிரைக்குட்டிகளை குகைக்கு வெளியில் விட்டு விட்டு அவற்றின் தாய்க் குதிரைகளுடன் குகைக்குள் சென்றேன். தீவட்டி திடீரென அணைந்ததும் இருட்டிலும் குதிரைகளால் தான் பார்க்க முடியும் என்பதாலும், அவைதாம் ஈன்ற குட்டிகளைப் பார்க்க வேண்டும் என்று ஆசை கொண்டதாலும் குகையிலிருந்து வெளியே வர முடிந்தது'' என்றான்.

அமைச்சரும் ''பேஷ்! இதற்காகத் தான் குட்டிகளைப் போடும் நிலையிலுள்ள குதிரைகளைக் கேட்டாயா? நீ மிகவும் கெட்டிக்காரனே! அது மட்டுமல்ல, தைரியமும் துணிச்சலும் கொண்டவன்'' என்றார். மன்னர் மகிழ்ந்து அவனை இளவரசனாக்கினார்.


Pritam Das, West Bengal

# உண்மையான ஆனந்தம்

- அனுபவ் மெனாரியா

ராஜன் அன்று ஒரே சந்தோஷத்தில் இருந்தான். காரணம் இன்னும் தீபாவளிக்கு ஆறுநாட்களே இருந்தன. அவனுடைய பட்டாசுக்கடையில் தினமும் நல்ல வியாபாரம் நடந்து கொண்டிருந்தது. அவனது கடைச் சரக்குகள் தரமானவையாக இருந்ததே அதற்குக் காரணம்.

சென்ற ஆண்டில் எண்ணூறுரூபாய் லாபம் கிடைத்தது. அதனால் அவன் தனக்கும் தன் தங்கைக்கும் பள்ளிக்கூடக்கட்டணம்கட்டி, புத்தகங்கள் வாங்கிக் கொண்டான். கொஞ்ச பணத்தை வங்கி சேமிப்புக் கணக்கில் போட்டுவிட்டு மீதப் பணத்தை வீட்டுச்செலவிற்கு வைத்துக் கொண்டான். இதனால் அவனது பெற்றோரும் மகிழ்ந்து போயினர்.

ராஜனின் தந்தை ஓராண்டிற்கு முன் நோயுற்றுப் படுக்கையில் கிடந்தார். அதனால் குடும்பத்தைப் பராமரிக்கும் பொறுப்பு முழுவதும் ராஜனின் மீது விழுந்தது. அதனால் படித்துக் கொண்டே பிற மாணவர்களுக்கு ட்யூஷன் சொல்லிக் கொடுத்தும் பணம் சம்பாதித்தான். இதனால் அவனது குடும்பம் சிரமப்படாமல் இருந்தது. அதனால் தன் தந்தைக்கும் வைத்தியம் பார்க்கமுடிந்தது.

தீபாவளியின்போது பட்டாசுக்கடை வைத்து அவன் லாபம் அடைந்தான். அதில் இரண்டு ஆண்டுகளிலும் நல்ல லாபம் கிடைத்ததால் இந்த ஆண்டிலும் பட்டாசுக் கடையைத் திறந்து வியாபாரம் செய்யலானான். அன்று விற்பனையில் கிடைத்த பணத்தை எடுத்துக் கொண்டு அவன் தன் வீட்டிற்குச்சென்று கொண்டிருந்தான். அப்போது ஒரு வீட்டில் மூன்று சிறுவர்கள்தம் தாயாரிடம் "பட்டாசு வேண்டும். புதுத்துணிமணிகள் வேண்டும்" என்று உரக்கக்கத்திப் பிடிவாதம் பிடித்துக் கொண்டிருந்தார்கள். அந்த வீட்டில் தரித்திரம் தாண்டவம்ஆடுவதைஅவன்



Agni Chemburkar, Maharashtra

கண்டான்.

அந்த ஏழைக்குடும்பத்தின் நிலையைக்கண்டு அவன் மனம்கலங்கினான். வீட்டை அடைந்ததும் அவன் தன் தந்தையிடம் அந்த ஏழைக்குடும்பத்தைப் பற்றிக்கூறி அவர்களுக்கு ஏதாவது உதவி செய்யலாமா என்று கேட்டான். அவன் தந்தையும் தாராளமாக செய் என்று கூறிவிட்டார்.

மறுநாள் ராஜன் தன் கடைக்குச் சென்றான். ஆனால் அவன் மனம் சரியாக இல்லை. எப்படியோ அன்றைய வியாபாரத்தை முடித்துக் கொண்டு மாலையானதும் கடையை மூடிவிட்டுக்கிளம்பினான். வழியிலுள்ள அந்த ஏழையின் வீட்டிற்குள் சென்று அங்கிருந்த மூதாட்டியை வணங்கி ஒரு பையை அவளிடம் கொடுத்தான்.

அவள் ஆச்சரியப்பட்டவாறே ''மகனே! நீ யார்? இதெல்லாம் என்ன?'' என்று கேட்டாள். ராஜனும் ''அம்மா! நேற்று இவ்வழியில் சென்றபோது உங்கள் வீட்டுக்குழந்தைகள்கதறிக் கெஞ்சியது என் காதில் விழுந்தது. இப்போதோ நீங்கள் என்னை மகனே என்று கூப்பிட்டீர்கள். அதனால் ஒரு மகன் தாய்க்கு உதவ வேண்டாமா? அம்மா! எனது இந்த சிறுகாணிக்கையை நீங்கள் ஏற்கத்தான் வேண்டும். மறுக்கவே கூடாது. நீங்கள் பெரும் பணக்காரியாக இருந்து நான் பரம ஏழையாக இருந்திருந்தால் நீங்களும் இப்படித்தானே செய்திருப்பீர்கள்?'' என்று கேட்க, அம்



Agni Chemburkar, Maharashtra



மூதாட்டியின்கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர்வழிந்தது.

அவள் ''மகனே! இந்த மாதிரி ஒரு மகனைப் பெற்றதற்காக எந்தத் தாயார்தான் ஆனந்தம் அடையமாட்டாள்? உன் மனதுதான் எவ்வளவு தாராளமானது!'' என்றாள். அப்போது அவளுடைய மூன்று குழந்தைகளும் வீட்டினுள் வந்தார்கள். அவர்கள் பட்டாசுகளையும் புதுத்துணிகளையும் இனிப்புகளையும் கண்டு மகிழ்ந்து போயினர். ராஜன் மனநிறைவுடன் அங்கிருந்து சென்றான்.

# உலக வழக்கம்

- மு.சிராஜ், விசாகப்பட்டிணம்

அந்தக் காலத்தில் மிருகங்களுக்குக் கூடப் பேசும் சக்தி இருந்தது. ஒரு கிராமத்து சிறுவன் தன் பள்ளிக் கூடத்திற்குப் போக ஒரு காட்டின் வழியே போக வேண்டி இருந்தது. ஒரு நாள் பள்ளியிலிருந்து திரும்பித் தன் வீட்டிற்குப் போகையில் ஒரு ஏரியிலிருந்த முதலை தன்னைக் காப்பாற்றும்படி உரக்க அவனிடம் வேண்டியது.

சிறுவனும் ''உனக்கு என்ன ஆபத்து?'' எனக் கேட்கவே முதலையும் ''நான் ஒரு வலையில் சிக்கிக் கொண்டிருக்கிறேன்'' என்றது. சிறுவனும் ''உன்னை நான் வெளியே எடுத்து விட்டால் நீ என்னைக் கொன்று விடுவாயே'' என்றான். முதலையும் ''என்னை நம்பு. உன்னைக் கொல்ல மாட்டேன். அருகில் வா'' எனவே அதை நம்பி அச்சிறுவன் அதனருகே சென்றான். முதலை அவனைத் தன் வாயில் கவ்வியது. ''இப்படித் தான் நீ நன்றி காட்டுவதா?'' என்று அவன் கேட்டான். முதலையோ ''இதுதான் உலக வழக்கம்'' என்றது.

சிறுவனோ ''நான் நம்ப மாட்டேன்'' எனவே முதலையும் ''நாம் முதலில் பார்க்கும் மூன்று பேர்களிடம் கேட்போம். அவர்கள் என்ன சொல்கிறார்கள் என்று பார்ப்போம்'' என்றது. முதலில் ஒரு கழுதை வரவே அதனிடம் அவர்கள் தம் பிரச்சினையைக் கூறினார்கள். அதுவோ ''என் எஜமானன் நான் செய்த வேலைகளுக்கு நன்றி விசுவாசம் காட்டாமல் என்னை வீட்டை விட்டுத் துரத்தி விட்டான்' என்று கூறி விட்டு ஓடி விட்டது.

அடுத்து ஒரு குதிரை வந்தது. அதுவும் தன் எஜமானனுக்கு நன்றி விசுவாசம் இல்லை என்று கூறி விட்டுப் போயிற்று. கடைசியாக ஒரு முயல் வரவே அதுவும் அவர்கள் கூறியதைக் கேட்டு விட்டு ''நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லை. எப்படி நடந்தது என்பதை நான் பார்த்த பிறகே எதுவும் சொல்ல முடியும்'' என்றது. முதலை உடனே கவ்வி இருந்த சிறுவனை விட்டு விடவே முயல் சிறுவனிடம் ''உங்கள் கிராமத்தவர்களுக்கு முதலை மாமிசம் மிகவும் பிடிக்கும் அல்லவா?'' என்று கேட்டது.

சிறுவனும் ''ஓ! மிகவும் பிடிக்குமே'' எனவே முயலும் ''அப்படியானால் நீ போய் அவர்களை அழைத்து வா. உன் பிரச்சினை தீரும்'' என்று சொல்லி விட்டு ஓடிப் புதரில் மறைந்தது. சிறுவனும் கிராமத்தை நோக்கி ஓடினான். அவன் கிராமத்




தவர்களை அழைத்து வரவே அவர்கள் முதலையைப் பிடித்தார்கள். அவர்களோடு வந்த வேட்டை நாய் முயலைத் தேடிக் கொண்டு போயிற்று.

அப்போது சிறுவன் ''முதலை சொன்னது சரிதான். இதுதான் உலக வழக்கம்'' என எண்ணிக் கொண்டான்.வு




# திருடன் தேசபக்தனே!

-ப. சியாம், போலாவரம்

கட்டையன் கனகபுரநாட்டின் பக்காத் திருடன். அவன் பெயரைக் கேட்டாலே மக்கள் நடுநடுங்கினார்கள். அரசாங்க வீரர்களால் அவனைப் பிடிக்கவும் முடியவில்லை. மன்னன் சந்திரசேனன் அப்போது தான் சிம்மாசனம் ஏறி இருந்தான். அத்திருடனை எப்படிப் பிடிப்பது என்று யோசிக்கலானான்.

ஒருநாள் கட்டையன் தலைநகரில் ஒரு பணக்காரர் வீட்டில் திருடி விட்டு வெளியே வந்து கொண்டிருந்தான். அவனைப் பார்த்த அரசாங்க வீரர்கள் அவனைத் துரத்தலானார்கள். திருடனோ அவர்களுக்கு அகப்படாமல் ஓடி நகரின் எல்லையிலுள்ள ஒரு பாழடைந்த கோவிலுக்குள் ஓடி ஒளிந்து கொண்டான். அவனைத் துரத்தி வந்த வீரர்கள் அவனைக் கண்டு பிடிக்க முடியாமல் திரும்பிப் போய் விட்டார்கள்.

ஆனால் சற்று நேரம் கழித்து அந்நாட்டுப் படைத் தலைவன் ஒருவன் இரு வீரர்களுடன் வந்தான். அவன் குரல் கொடுக்கவே அக்கோவிலில் ஒளிந்திருந்த குணபுரநாட்டு ஒற்றர்கள் அவனருகே வந்தார்கள். அவர்களிடம் கனகபுரப் படைத்தலைவன் ''படை பலம் பற்றிய விவரங்களையும் இந்நாட்டை எப்படித் தாக்கிக் கைப்பற்ற வேண்டும் என்றும் விவரமாக எழுதியுள்ளேன் இந்த வரைபடத்தையும் பத்திரங்களையும் கொண்டு போய் உங்கள் மன்னரிடம் கொடுங்கள்'' என்று சொன்னான். ஒற்றர் தலைவனும்



அவற்றை வாங்கிக் கொண்டு ஒரு பணப்பையை அப்படைத்தலைவனிடம் கொடுத்தான்.

இதை எல்லாம் கேட்டும் பார்த்துக் கொண்டும் இருந்த கட்டையன் சட்டெனப் பாய்ந்து ஒற்றர் தலைவனின் கையிலிருந்த பத்திரங்களைப் பிடுங்கிக் கொண்டு அரண்மனையை நோக்கி ஓடினான். படைத்தலைவனும் ஒற்றர்களும் அவனைத் துரத்தித் தாக்கினார்கள். காயப்பட்டும் அதனைப் பொருட்படுத்தாமல் அரண்மனைக்குள் ஓடி மன்னன் சந்திரசேனனிடம் அப்பத்திரங்களைக் கொடுத்து பாழடைந்த கோவிலில் நடந்ததைக் கூறினான். மன்னன் உடனே அப்படைத் தலைவனையும் வீரர்களையும் ஒற்றர்களையும் கைது செய்து சிறையில் அடைத்தான்.

அப்போது மன்னன் முன் கட்டையனை என்ன செய்வது என்ற பிரச்சினை எழுந்தது. பல திருட்டுகளைச் செய்த அவனைச் சிறையில் அடைப்பதா அல்லது நாட்டை எதிரிகள் கைக்குப் போகவிடாமல் காப்பாற்றியதற்காக அவனைப் பாராட்டுவதா என்று அவன் யோசித்தான்.

அப்போது அவனுக்குத் தன் தந்தை கொடுத்துப் போன ஓலைச் சுவடு நினைவிற்கு வந்தது அதை எடுத்துப் பார்த்ததும் முதல் ஓலையில் நாட்டுப்பற்றை விட உயர்ந்தது . வேறெதுவும் இல்லை'' என்று இருந்தது. எனவே கட்டையனை தேசபக்தன் எனக் கூறி அவனது குற்றங்களை மன்னித்து பெருந்தொகையைப் பரிசாகக் கொடுத்து அவனை நல்ல விதமாக வாழும்படி அறிவுரை கூறி அனுப்பினான்.



# மன்னனின் கைக்குட்டை

- சைலபாலா மஹந்த்தி

வேட்டையாடுவதை மிகவும் விரும்பிய ஒரு மன்னன் வேட்டையாடப் போகும்போது மாறுவேடத்தில் செல்வதையே வழக்கமாகக் கொண்டிருந்தான். ஒரு முறை தன் நாட்டின் எல்லைக்புறக் காட்டில் வேட்டையாடிக்


Sarthak Sobhana Satpathy, Orissa

கொண்டிருக்கையில் அவன் வழிதவறி அண்டை நாட்டுக் காட்டிற்குள் சென்று விட்டான். மிகவும் தாகம் எடுத்ததால் சற்றுத் தொலைவில் ஓடிய சிற்றாற்றைக் கண்டு அவன் அங்கு போய் தண்ணீரை அள்ளிக்குடித்தான். அப்போது யாரோ 'கல கல'வென்று சிரித்த சத்தம் கேட்டு அவன் திரும்பிப் பார்த்தான்.

சற்று தூரத்தில் சில இளம் பெண்கள் குளித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் அந்நாட்டு அரசகுமாரியும் அவளது பணிபெண்களும் என்பதை அவன் விசாரித்துக் தெரிந்து கொண்டான். தான் இன்னானெனக் கூறாமல் அவன் அரசகுமாரியைக் கண்டு தான் அவளை மணக்க விரும்புவதாகக் கூறினான். அவளும் அவனைப் பார்த்துத் திருப்தி அடைந்து ''இது பற்றி நீங்கள் என் தந்தையிடம் பேசித் தான் முடிவு காண வேண்டும்'' என்றாள்.



அந்த மன்னனும் மாறுவேடத்திலேயே அந்த அரசகுமாரியுடனும் அவனது பணிப்பெண்களுடனும் சேர்ந்து சென்று அரசகுமாரியின் கிழத்தந்தையைக் கண்டு தன் விருப்பத்தைக் கூறினான். கிழ மன்னனும் ''உனக்கு ஏதாவது தொழில் செய்யத் தெரியுமா?'' என்று கேட்க அவனும்'' நான் சித்திரம் வரைவேன். துணிகளில் பூவேலை செய்வேன்'' என்றான். கிழமன்னனும் திருப்தி அடைந்து தன் மகளை அவனுக்குத் திருமணம் செய்து வைத்தான். அந்த மன்னனும் தான் மணந்த அரச குமாரியுடன், தன் நாட்டிற்குத் திரும்பி வந்தான்.

இன்னொரு முறை அந்த மன்னன் மாறு வேடத்தில் காட்டிற்கு வேட்டையாடப் போனபோது ஒரு கொள்ளைக் கூட்டத்திடம் அகப்பட்டு விட்டான். கொள்ளைக்காரர் தலைவன்



அவனிடம் பணம் கேட்கவே அவனும் ''நான் ஏழை. கைக்குட்டைகளில் பூவேலை செய்து பிழைப்பவன். என்கைக் குட்டைகளுக்கு அரண்மனை அந்தப்புரத்தில் நல்ல கிராக்கி. அதனால் கைக்குட்டைகளை நீ கொடுத்தால் அவற்றில் பூவேலை செய்து கொடுக்கிறேன். அவற்றை அரண்மனை அந்தப்புரத்தில் கொடுத்து நீ நிறையப் பணம் பெற்றுக் கொள்'' என்றான்.

அரண்மனையில் அரசி மன்னனைக் காணவில்லையே என்று தவித்துக் கொண்டிருந்தபோது கொள்ளைக்காரர் தலைவன் மன்னன் பூவேலை செய்த கைக் குட்டைகளைக் கொண்டு வந்து கொடுத்தான். அவளும் அக்கைக்குட்டைகளைப் பார்த்து அவற்றில் ஒவ்வொன்றிலும் ஒரு எழுத்து இருப்பதைக்கண்டாள். அது தன் கணவனின் கைவேலை என அறிந்து அக்கைக்குட்டைகளிலிருந்து தன் கணவனைப் பற்றித் தெரிந்து கொண்டாள். உடனே கொள்ளைக்காரர் தலைவன் சிறையில் அடைக்கப்பட்டான். காட்டிற்குப் படை அனுப்பப்பட்டு மன்னன் மீட்டு வரப்பட்டான். மன்னனின் துணியில் போடும் பூவேலை அவனை மீட்டுத் தந்தது அதிசயம் தானே!

# தீபாவளி பற்றிய புராணக் கதைகள்

இந்தியா முழுவதும் கொண்டாடப்படும் தீபாவளி சம்மந்தமாக எவ்வளவு தேவர்களையும் கடவுள்களையும் கூறுகிறார்கள் தெரியுமா? கிருஷ்ணர், ராமர், காளி, மகாபலி, யமன், இந்திரன் என்றெல்லாம் கூறுகிறார்கள்.

தீபாவளி நம் நாட்டில் பல பகுதிகளில் பல விதமாகக் கொண்டாடப் படுகிறது. பொதுவாக தசராப் பண்டிகைக்குப்பின் இருபது நாட்கள் கழித்து வரும் அமாவசையன்று தீபாவளிப் பண்டிகை கொண்டாடப்படுகிறது. இது அநேகமாக ஐப்பசி மாதத்தில் அதாவது அக்டோபர் அல்லது நவம்பர் மாதத்தில் வரும். சிலர் கார்த்திகை மாதத்தில் தீபாவளியைக் கொண்டாடுகிறார்கள்.

ராமாயணத்தில் ராமர் சீதையுடனும் லட்சுமணனுடனும் பதிநான்கு வருடங்கள் வனவாசம் செய்து விட்டு அயோத்திக்குத் திரும்பி வந்ததால் அயோத்திவாசிகள் தீபங்களை நாடு முழுவதும் ஏற்றி அவர்களுக்கு வரவேற்பை அளித்தார்கள் என்று கூறப்படுகிறது. அவ்வாறு ராமர் திரும்பி வந்ததை நாம் தீபாவளியாகக் கொண்டாடுகிறோம்.







* வட இந்தியாவில் இது ஐந்து நாட்களுக்குக் கொண்டாடப்படுகிறது. இந்தப் பண்டிகை அமாவாசைதினத்திற்கு இரண்டு நாட்களுக்கு முன் தொடங்குகிறது. முதல் நாளை **'தன்தேரஸ்'** என்கிறார்கள். இந்த நாளில் தேவர்களின் வைத்தியரான தன்வந்திரியை வழிபடுகிறார்கள். பாற்கடலை தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து கடைந்தபோது அதிலிருந்து வந்தவர்தாம் தன்வந்திரி.



* இந்த நாள் சில இடங்களில் **'தன திரயோதசி'** என்றும் கூறப்படுகிறது. அன்று விளக்குகளை ஏற்றி மரணம் வரவிடாமல் தடுக்கப் படுகிறது என்ற நம்பிக்கை பலர் கொண்டிருக்கிறார்கள். இந்த விளக்குகளை எம தீபங்கள் எனக் கூறுகிறார்கள். வெகு காலத்திற்கு முன் ஒரு இளவரசனை அவனது திருமணமான நான்காவது நாளில் ஒரு நச்சுப் பாம்பு தீண்டி அவன் சாகக் கிடப்பான் என கூறப்பட்டது! அதை அறிந்து கவலை கொண்ட அவனது மனைவி வீடு முழுவதும் விளக்குகளை ஏற்றி



முற்றத்தில் தங்க நகைகளையும் வெள்ளிப் பாத்திரங்களையும் குவித்தாள். இரவு முழுவதும் கண் விழித்துப் பக்திப் பாடல்களைப் பாடினாள். பாம்பின் உருவில் வந்த எமன் பக்தி கீதங்களைக் கேட்டு பரவசமடைந்து அவள் முன் அமர்ந்து விட்டான். காலையானது. அவன் எதுவும் செய்யாமல் போய் விட்டான். அது முதல் எமதீபம் ஏற்றுவது என்ற பழக்கம் நடைமுறையில் வந்து விட்டது!





* இரண்டாவது நாள் நரகசதுர்தசியாகக் கொண்டாடப்படுகிறது. நரகாசுரன்வதம் செய்ய பட்ட நாள் இதுவாம். கிருஷ்ணர் கடும் போர் புரிந்து அன்று நரகாசுரனைக் கொன்றாராம். சிலர் இதை ரூபசதுர்தசி என்றும் கூறுகிறார்கள். அன்று எல்லோரும் புனித நீராடுகிறார்கள். அவர்கள் தாம் குளிக்கும் நீரில் சில மூலிகைகளையும் போட்டுக் கொள்கிறார்கள்.



*தமிழ் நாட்டில் அமாவாசைக்கு முன் விடியற் காலையில் 'கங்காஸ்நானம்' என்று கூறி நீராடுகிறார்கள். இது எண்ணைய் தேய்த்துக் கொண்டு குளிப்பதாம். கங்கை நதியில் குளிப்பதற்குச் சமமாக இதைக் கருதுகிறார்கள். இவ்வாறு குளித்த பின் புத்தாடைகளை அணிகிறார்கள். இனிப்புப் பண்டங்களை அன்று நிறையத் தின்று அவை ஜீரணமாக லேகியத்தையும் தயார் செய்து உட் கொள்கிறார்கள்.







*மூன்றாவது நாள் அமாவசை. தீபாவளித் திருநாள். அன்று லட்சுமி பூஜையை வணிகர்கள் செய்கிறார்கள். வட இந்தியர்கள் அன்று புதுக் கணக்கு ஆரம்பிக்கிறார்கள். வீடுகளை வெள்ளை அடித்துப் புத்தாடைகள் அணிந்து புதுப் பாத்திரங்கள் வாங்கி, விளக்குகளை ஏற்றி, லட்சுமியை வரவேற்கிறார்கள்.





*கோவர்த்தன பூஜை என்பதும் தீபாவளியின் போது நடத்தப்படும் பூஜை. புராணங்களின் படி கோகுலவாசிகள் மழைக்காலம் முடிந்ததும் இந்திரனை ஒவ்வொரு ஆண்டி ம் வழிபடுவார்களாம். ஆனால் கிருஷ்ணர் அவர்களிடம் இந்திரனை வழிபடாமல் கோவர்த்தன மலையை வழி படச் சொன்னாராம். கோகுலவாசிகள் தன்னை வழிபடாமல் இருப்பது கண்டு இந்திரன் கோபம் கொண்டான். அதனால் கோகுலவாசிகளைத் தண்டிக்க எண்ணி அவன் ஒரேயடியாக அங்கு மழை பெய்யச் செய்தான். எங்கும் வெள்ளப் பெருக்கு எடுத்து வீடுகள் நாசமாகவே, கிருஷ்ணர் மக்களுக்கு உதவ வந்து, தம் சுண்டு விரலால் கோவர்த்தன மலையைத் தூக்கித் தாங்கி காத்தார். அதனால் தான் தீபாவளி சமயத்தில் கோவர்த்தன பூஜை செய்வது என்று ஏற்பட்டது.



*பாயி தூ என்னும் விழா சகோதரர்களுக்கும் சகோதரிகளுக்குமிடையே உள்ள பாசத்தைக் காட்டுவது. மரண தேவனான எமன் இந்த நாளில் தான் தன் சகோதரி எமியின் இல்லத்திற்கு விஜயம் செய்தானாம். எமி தன் சகோதரன் எமனின் நெற்றியில் திலகமிட்டு விருந்தளித்தாளாம். அப்போது இருவரும் பரஸ்பரம் பரிசுகளை வழங்கிக் கொண்டார்களாம். அன்று முதல் இந்த நாளில் சகோதரர்கள் சகோதரிகளின் வீடுகளுக்குச் சென்று வரும் வழக்கம் ஏற்பட்டது இது தீபாவளி கழிந்த ஐந்தாவது நாளில் நடைபெறுகிறது.



# நரகாசுரவதம்

சிவனார் செல்வன்



தீபாவளி நமக்கெல்லாம் சிறப்பான பண்டிகை. தீபாவளியின் தொடர்பான புராணக் கதைகள் உள்ளன. தீபாவளியன்று பிரகாசமாக விளக்குகளை ஏற்றி வைத்தால் லட்சுமிதேவி அங்கு வருவாள் என்று பலர் உறுதியாக நம்புகிறார்கள்.

ஸ்ரீகிருஷ்ணர் மானிடர்களுக்கும் மற்றவர்களுக்கும் தீங்கு இழைத்து வந்த நரகாசுரனை தீபாவளியன்று கொன்றார். அந்த அசுரனின் நினைவாக தீபாவளி நாளுக்கு முதல் நாளை நரகசதுர்தசி என்று கொண்டாடுகிறார்கள். மகாவிஷ்ணு இரண்யாட்சனைக் கொல்ல வராக அவதாரம் எடுத்தார். அந்த வராக மூர்த்திக்கும் பூதேவிக்கும் பிறந்தவன்தான் நரகாசுரன். அவன் மாபெரும் சக்கரவர்த்தியாகவும் கொடிய ராட்சஸனாகவும் ஆவான் என அவனது ஜாதகத்தை கணித்த சோதிடர்கள் கூறினார்கள்.

தன் மகன் தர்மப்பிரபு என்று பெயர் பெற வேண்டுமென பூதேவி விரும்பினாள். அவனுக்குக் கெட்டவர்களின் சாகவாசம் ஏற்பட்டு விடக் கூடாது என்று எச்சரிக்கையுடன் இருந்தாள். ஆனாலும் அசுரர்களின் குருவான சுக்கிராச்சாரியார் அவனைக் கண்டு ''அசுரர்களைக் காக்கவே நீ பிறந்தவன். எனவே உன் பொறுப்பை உணர்ந்து செயல்படு'' என்று அறிவுரைகூறினார்.

அதன்பின் நரகாசுரனின் வாழ்க்கைப் பாதையே மாறியது. கடும் தவம் புரிந்து அவன் பிரம்மாவிடமிருந்து அரிய வரங்களைப்பெற்றான். பூதேவிவேண்டிக் கொண்டதால் மகாவிஷ்ணு அவனுக்கு நாராயணாஸ்திரத்தை அளித்தார்.

இவ்வாறு அரிய வரங்களையும் அஸ்திரங்களையும் பெற்ற நரகாசுரனுக்கு தான் என்ற அகங்காரம் வந்து விட்டது. சாதுக்களையும், ரிஷி முனிவர்களையும் தேவர்களையும் அவன்துன்புறுத்தலானான். ரிஷிகள் புரியும் யாகங்களை அழிக்கலானான்.



இந்திரலோகத்தின் மீது

அவன் படை எடுத்துப் போய் இந்திரனைத் தோற்கடித்தான். அவனது வெண் குடையைப் பறித்துக் கொண்டான். அவனது சிம்மாசனத்தில் அமர்ந்து தேவர்களைவிரட்டி விட்டு அட்டூழியங்களைச் செய்தான். அதன்பின் பூவுலகில் தன் தலைநகரான பிராக்ஜோதிஷத்தை அடைந்து அசுரர்களின் நன்மைக்காக ஆட்சி புரியலானான். ஆயிரக்கணக்கில் பெண்களைச்சிறை பிடித்தான்.

தேவர்களும் மானிடர்களும் ஒன்று திரண்டு துவாரகாபுரிக்குப் போய் ஸ்ரீகிருஷ்ணரிடம் நரகாசுரன் புரியும் அட்டூழியங்களைக் கூறித் தம்மைக் காக்கும்படி வேண்டினார்கள். அவரும் சத்தியபாமாவுடன் தம் வாகனமான கருடனின் மீது அமர்ந்து பிராக்ஜோதி புரத்திற்குச் சென்றார். நரகாசுரனின் கோட்டையைத் தகர்த்து அதற்குள் அவர் நுழைந்தார். நரகாசுரன் பயங்கரமாகப் போர் புரிந்து கிருஷ்ணரைத் தாக்கி அவர் நினைவிழந்து விழும்படிச் செய்து விட்டான். அது கண்டு சத்தியபாமா கோபம் கொண்டு நரகாசுரன் மீது அம்புகளைப் பொழிந்து அவனைத் திக்கு முக்காடச் செய்தாள். அதற்குள் கிருஷ்ணர் தம் நினைவு பெற்று எழுந்து வந்து நரகாசுரனுடன் போர்புரிந்தார். முடிவில் அவர் தம் சக்கராயுதத்தைப் பிரயோகித்து நரகாசுரனைக் கொன்றார்.

கிருஷ்ணர் நரகாசுரன் சிறைப் பிடித்த பெண்களையெல்லாம் விடுதலை செய்தார். இந்திரனிடமிருந்து நரகாசுரன் அபகரித்த வெண்குடையையும் கர்ணகுண்டலங்களையும் அவனிடம் கொடுத்து அவனது சிம்மாசனத்தையும் அவனுக்கு அளித்தார். உலகிற்குத் தொல்லைகளைக் கொடுத்த நரகாசுரன் ஒழிந்ததால் மகிழ்ச்சி அடைந்த மக்கள் அவன் இறந்த நாளை பண்டிகையாகக் கொண்டாடி வருகிறார்கள்.



மனிதன் பிறருக்கு நன்மை புரிபவன். பிறருக்குத் தொல்லைகள் கொடுத்து தீமை விளைவிப்பவன் அசுரன். அரக்கன். ராட்சஸன். இப்படிப்பட்டவனை தண்டித்து மக்களைக் காப்பவனே தேவன். கடவுள். இந்த உண்மையைப் புரிந்து கொண்டு நல்வழியில் சென்றால் எப்போதும் மகிழ்ச்சிதான். இதுதான் தீபாவளி கொண்டாடப்படுவதன் உட்கருத்து.



# நான் மறக்க முடியாத தீபாவளி!

ஆகா! தீபாவளி வரப்போகிறது! ஒரு வருடகாலமாக பெட்டிக்குள் சிறைப்பட்டிருந்த நான் இப்போது விடுவிக்கப்பட்டிருக்கிறேன். என்னை பளபளவெனத்தோன்ற தேய்த்து விட்டார்கள். என்குழியில் எண்ணெய் ஊற்றித் திரியை அதில் போட்டு விட்டார்கள். நான் ஒளிவிட்டுப் பிரகாசமாக எரிவேன்!

இப்போது நான் யாரென்பதை நீங்கள் அறிந்து கொண்டிருப்பீர்களே. ஆம்! நான் ஒரு பித்தளை அகல் விளக்குதான்! உத்திரப் பிரதேசத்து வாராணசியிலுள்ள ஒரு கைவினைக் கலைஞர் தன்கைத்திறனால் எனக்கு இந்த அழகிய திருஉருவத்தைக் கொடுத்தார். நான் ஒருவிற்பனைக்கடையில்வைக்கப்பட்டதுமே என்னைக்கண்ட சகுந்தலாமாமி ஒரேயடியாக மகிழ்ந்துபோய் என்னை விலைக்கு வாங்கித் தம் வீட்டிற்கு எடுத்து வந்து விட்டார்.

அடுத்த வீட்டு ஊர்மிளாவிற்கு திருமணம் நடந்தபோது அவர் என்னை ஊர்மிளாவிற்குத் தன்பரிசாக அளித்து விட்டார். என்னோடு பலவித விளக்குகளும் ஊர்மிளாவிற்குப் பரிசுகளாகக் கிடைத்தன. ஊர்மிளாவுடன் நான் சர்மாவின் வீட்டிற்கு சென்றேன். இது பத்து வருடங்களுக்கு முன் நிகழ்ந்த சம்பவம். இதற்குப்பின் நான் அந்த வீட்டிலேயே இருந்து விட்டேன். எனக்கு ஊர்மிளாவின் தலை தீபாவளி நன்கு நினைவில் உள்ளது.

அப்போது அவள் இளம் பெண். சரிகைப்பட்டுப் புடவை உடுத்தி அவள் என் ஒளியில் மேலும் அழகாகத் திகழ்ந்தாள். முற்றத்தில் வைக்கப் பட்ட பித்தளை விளக்கு நான் ஒன்றுதான். என்னைச் சுற்றி இருந்தவை மண் அகல்விளக்குகள். பெரிய வெள்ளி விளக்குகள் எல்லாம் பூஜை அறையில் சுவாமி படங்களுக்கும் விக்கிரகங்களுக்கும் முன் வைக்கப் பட்டிருந்தன.

சர்மா பெரும் பணக்காரர். அவருக்கு பலவித விளக்குகளைச் சேகரித்து வைத்துக் கொள்வதில் மிக்க ஆசை இருந்தது. விடுமுறைகளில் எந்தெந்த ஊர்களுக்கு அவர் போகிறாரோ, அங்கு கிடைக்கும் விதவிதமான விளக்குகளை வாங்கிக் கொண்டு வந்து விடுவார். இப்படியாக எவ்வளவு விளக்குகள் அந்த வீட்டில் இருந்தன என்று தெரியுமா? தமிழ் நாட்டு உயரமான குத்துவிளக்கு. காமாட்சி அம்மனின் திருஉருவத்தோடு உள்ள காமாட்சி விளக்கு, கருநிறக் களிமண்ணாலான கர்நாடக விளக்கு, முறிவெண்கலத்தாலான குருவாயூர் கேரள விளக்கு, மகாராஷ்டிராவின் வெள்ளிநகாசு வேலையுடன் கூடிய அகல் விளக்கு, பலவித ஆரத்தி, அர்ச்சனை விளக்கு.... இப்படிப் பல வித விளக்குகள்....

கடவுள் வழிபாட்டில் நம் நாட்டின் விளக்குகள் முக்கிய இடம் பெற்றுள்ளதை



நீங்கள் அறிவீர்கள். பழங்காலத்தில் போர்வீரர்களைப் போர்க் களத்திற்கு அனுப்பவும், வெற்றி பெற்று வரும் வீரர்களை வரவேற்கவும் விளக்குகள் பயன்பட்டன.

விளக்கு நடனம் எனக் கேள்விப் பட்டிருக்கிறீர்களா? பஞ்சாபில் திருமணங்களில் 'ஜாகோ' என்ற விளக்கு நடனம் நடக்கிறது. குஜராத்தில் 'கார்பா' என்ற கண்கவர் விளக்கு நடனம் நடைபெறுகிறது.

சகுந்தலா மாமி ஆடி மாத வெள்ளிக் கிழமைகளில் மாவிளக்கு ஏற்றுவது வழக்கம். இது அரிசிமாவையும் வெல்லத்தையும் சேர்த்துப் பிசைந்து விளக்காகச் செய்து நெய்த்திரிபோட்டு ஏற்றப்படுவது.



சர்மாவின் வீட்டில் எல்லோருக்கும் என்னைப் பிடிக்கும். ஆனால் ஒருவருக்குத் தான் பிடிக்காது. அந்த கனவான் யார் தெரியுமா? ஜிம்மி என்ற அல்சேஷியன் நாய்தான். அதற்கு தீபாவளி என்றாலே வெறுப்பு. பல விளக்குகள் எரிவதைக் கண்டு லொள் லொள் ளென்று குரைக்கும். விளக்குகளாகிய எங்களைக் கண்டு சீறிப்பாயும். ஒருமுறை ஒரு மண் அகல் விளக்கை மிதித்து உடைத்தும் விட்டது.

இன்று தீபாவளி. ஊர்மிளாவின் பெண்கள் நேஹாவும், நீனாவும் ஜிம்மியுடன் துள்ளி ஓடி விளையாடிக் கொண்டிருந்தார்கள். ஊர்மிளா ஒரு தட்டில் அகல் விளக்குகளை ஏற்றி எடுத்து வரிசையாக வைத்துக் கொண்டிருந்தாள். ஜிம்மி ஓடி அவளைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தது. ஊர்மிளா வீட்டு மதில் சுவரின் மீது வரிசையாக வைத்து விட்டு முற்றத்திற்கு வந்தாள். அங்கு போடப் பட்டிருந்த அழகிய கோலத்திலும் விளக்குகளை வைத்தாள். முடிவில் அவளது கையில் இருந்த தட்டில் மீதம் இருந்தது ஒரு விளக்கு. அது நான்தான்.

ஊர்மிளா என்னுடன் தட்டை எடுத்துக் கொண்டு நின்ற போது ஜிம்மி அவளைச் சுற்றிக் சுற்றிக் குதித்தது. எனக்கு பயம் பிடித்தது. ஜிம்மி தட்டைத் தட்டி விட்டால் நான் கீழே விழத்தானே வேண்டும்! இவ்வாறு யோசிக்கையில், ஜிம்மி ஆடிய ஆட்டத்தில் ஊர்மிளாவின் கையிலிருந்த தட்டோடு நானும் கீழே விழுந்தேன். என்னுள்ளிருந்த எண்ணெய் கீழே சிதறியது. எரிந்து கொண்டிருந்த திரி, ஊர்மிளாவின் புடவையின் பக்கம் போய் விழுந்தது.

அவள் புடவை பற்றி எரியப் போகிறதே என்று நான் பயந்தேன். நல்ல வேளை! ஜிம்மி எரியும் அந்தத் திரியை இழுத்து வேறுபுறமாகத் தள்ளி விட்டது. ஊர்மிளாவும் சட்டெனப் போய் எரியும் திரியைத் தன் காலால் மிதித்து அணைத்து விட்டாள். ஜிம்மிக்கு திரியை இழுத்தபோது இலேசாகக் காயம்பட்டது. நல்ல வேளை! யாருக்கும் எந்தக் கெடுதலும் ஏற்படவில்லை. ஜிம்மி ஊர்மிளாவைக் காப்பாற்றியது கண்டு என் மனம் நெகிழ்ந்தது. அப்போது முதல் ஜிம்மியின் மீது நான் கொண்டிருந்த வெறுப்பும் மறைந்தது.

இப்போது எங்கள் குடும்பம் குதூகலம் நிறைந்த குடும்பம்!

# லக்ஷ்மி கடாக்ஷம்

ரத்தினபுரியின் மன்னன் ரத்தினசேனன். அவன் மனைவி கனகாங்கி. மன்னன் ராணியை மிகவும் விரும்பினான். அதனால் அவள் மனம் மகிழ நடந்து கொண்டான். ஒரு நாள் சில அயல் நாட்டு வியாபாரிகள் மன்னனைக் கண்டு கண்ணைப் பறிக்கும் விலையுயர்ந்த வைரக் கற்களைப் பரிசாக அளித்தனர். அவற்றை ஏற்று மன்னன் தன் நாட்டிலேயே திறன் மிக்க பொற் கொல்லர்களை அழைத்து அந்த வைரங்கைளப் பதித்த கண்கவர் வைர மாலையைத் தயாரிக்கச் சொன்னான்.

வைரமாலை தயாரானதும் மன்னன் அதனை ராணி கனகாங்கியிடம் கொடுக்கவே அவள் ஒரேயடியாக மகிழ்ந்து போனாள். அதைத் தன் கழுத்தில் அணிந்து அழகு பார்த்து ஆனந்தப்பட்டுக் கொண்டாள். அதை விட்டு ஒரு விநாடி கூடப் பிரிந்திருக்க அவள் விரும்பவில்லை. அதனால் அது எப்போதும் அவள் கழுத்திலேயே இருந்தது. குளிக்கும் போதே அதைக் கழற்றி ஒரு புறமாக வைத்து விட்டு குளித்து முடித்தபின் அவள் அந்த வைரமாலையை எடுத்து அணிந்து கொள்வாள்.



ஒரு நாள் ராணி அரண்மனையை ஒட்டி ஓடும் ஆற்றிற்குக் குளிக்கத் தன் பணிப்பெண்ணுடன் சென்றாள். அப்போது கழுத்திலிருந்த வைர மாலையைக் கழற்றி கரையில் வைத்துவிட்டு, பணிப் பெண்ணிடம் அதைப் பத்திரமாக பார்த்துக் கொள்ளும்படிக் கூறிவிட்டு அவள் ஆற்றில் இறங்கினாள். அவள் குளித்துக் கொண்டிருக்கும் போது ஆகாயத்தில் பறந்து கொண்டிருந்த ஒரு கழுகு அந்த வைரமாலையைப் பார்த்தது. அது ஏதோ தின்பண்டம் என்று

-சுபா சங்கரன்-

எண்ணி அது பாய்ந்து வைரமாலையைக் கொத்தி எடுத்துக் கொண்டு பறந்து போய்விட்டது.

அதைக் கண்ட பணிப்பெண் கூச்சலிட்டாள். ராணியும்கழுகுதன்வைரமாலையைக் கொத்திச்செல்வதுகண்டுகண்ணீர்உகுத்தாள். மன்னனுக்கு உடனே தகவல் தெரிவிக்கப் படவே, அவன் வீரர்களை அனுப்பி வைர மாலையைக் கழுகு எங்காவது கீழே போட்டிருந்தால்அதைக் கண்டுபிடித்து எடுத்து வருமாறுகட்டளைஇட்டான். மேலும் ராணியின் வைரமாலையை யாராவது கொண்டு வந்து கொடுத்தால் அவர் கேட்பதைக் கொடுப்பதாகஅறிவித்தான்.



அதேஆற்றின்கரையில் அரண்மனையிலிருந்து கொஞ்ச தூரம் தள்ளிஒருகிழவிகுடிசை போட்டுக் கொண்டு வாழ்ந்து வந்தாள். அவள் சலவைதொழிலாளி. கழுகு வைரமாலையைக்கொத்தி எடுத்து பறந்து போய்க் கொண்டிருந்தபோது அக்கிழவி தனக்குத் தொல்லை கொடுத்த ஒரு கொக்கை அடித்துக்கொன்று தன் குடிசையின்கூரைமீது போட்டாள். கூரைமீது கிடந்த இறந்தபோன கொக்கைக் கண்ட கழுகு தான் பற்றி இருந்த வைரமாலையைக் கூரையின் மீது போட்டிவிட்டுப் பாய்ந்து கொக்கின்உடலைத்தூக்கிக் கொண்டு போய்விட்டது. தன் குடிசைக் கூரைமீது பளபளக்கும்ஏதோஒரு பொருளைக் கழுகு போட்டுவிட்டுப் போனதை கிழவி பார்த்தாள். உடனேகூரைமீது ஏறி அது என்ன என்று எடுத்துப் பார்த்தாள். அது ஒரு வைரமாலை அப்போது சிலர் ஆற்றங்கரை வழியே போகும்போது ராணியின் வைரமாலை காணாமல் போய்விட்டதென்றும் அதை கொண்டு வந்து கொடுப்பவருக்கு மன்னர் அவர் கேட்கும் பரிசைக் கொடுப்பார்என்றும்பேசிக்கொண்டு போனார்கள்.

தான் எடுத்த வைரமாலை ராணியினுடையது தான் என்று கிழவி நம்பினாள். அதனால் அதைத் துணிக்குள் சுருட்டிமறைத்து எடுத்துக் கொண்டு அரண்மனைக்குச் சென்றாள்.. அரண்மனை வாயிற் காப்போனிடம் அவள்தான் மன்னரைப் பார்க்க வேண்டும் என்று சொன்னதும் அவன் அவளை உள்ளே போக அனுமதித்தான். ஏனெனில் யார் வந்தாலும் தடுக்காமல் உள்ளே விடும்படி மன்ன வாயிற்காப்போனுக்குக்கட்டளை இட்டிருந்தான்.

அவள்மன்னனைக்கண்டு "அரசே! எனக்கு ராணியின் வைரமாலை கிடைத்து விட்டது. இதோபாருங்கள். இனி நீங்கள் அறிவித்தபடி நான் எதைக் கேட்டாலும் இந்த ஏழைக் கிழவிக்கு அதைக் கொடுப்பீர்களா?" என்று கேட்டாள். மன்னனும் "நான் வாக்கு தவற மாட்டேன். உனக்கு என்ன வேண்டுமோ, அதைக் கேள். நான்கொடுக்கிறேன்" என்றான். கிழவியும் வைரமாலையை மன்னனிடம்

கொடுத்தவாறே ''அரசே! இன்னும் ஒரு வாரத்தில்தீபாவளிவரப்போகிறது. அன்றிரவு எல்லாவீடுகளிலும் விளக்குகளை ஏற்றி ஒளிமயமாக்குவது வழக்கம். ஆனால் இந்த ஆண்டு தீபாவளி இரவில் என் குடிசையில் தான் விளக்கு எரிய வேண்டும். வேறு யார் வீட்டிலும் இந்நாட்டில் விளக்கும் எரியக் கூடாது. எந்தவிதமானவெளிச்சமும் இருக்கக் கூடாது. இப்படி ஒருஉத்திரவை நீங்கள்போட வேண்டும். இது தான் நான் தங்களிடம் கேட்பது'' என்றாள்.

மன்னன் இந்த விசித்திரக் கோரிக்கையைக் கேட்டு திடுக்கிட்டான். ஆனால் கிழவிக்கு கொடுத்த வாக்கை நிறைவேற்றியே ஆக வேண்டும். எனவே வேறு வழியின்றி கிழவி கோரியபடி மன்னன் கட்டளை பிறப்பித் தான். அதன் படி அந்நாட்டில் தீபாவளி இரவில் எந்த வீட்டிலும்விளக்குஎரியவில்லை. எவ்வித ஒளியும் இருக்கவில்லை. எங்கும்ஒரேஇருட்டாகஇருந்தது. கிழவியின் குடிசைக்குள் மட்டும் ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது.



அந்த தீபாவளி இரவில் அந்நாட்டைப் பார்க்க மேலுலகிலிருந்து லக்ஷ்மி தேவி பூவுலகிற்குவந்தாள். எங்கும்ஒரேஇருட்டாக இருப்பதையும்ஒரேஒருகுடிசையில் மட்டும் விளக்குஎரிவதையும்அவள்கண்டாள். அந்த குடிசையின்முன்நின்று அவள்அதன்கதவைத் தட்டினாள்.

கிழவியும் உள்ளிருந்தபடியே ''யாரது என்று கேட்டாள். லக்ஷ்மியும்'' முதலில் கதவைத் திற. உள்ளேவந்த பிறகு நான் யாரென்பதைக் கூறுகிறேன்'' என்றாள். கிழவியோ ''முடியாது. முதலில் நீ யாரென்பதைக் கூறினாலே உன்னைஉள்ளேவரஅனுமதிப்பேன்'' என்றாள். லக்ஷ்மியும் ''நான்தான்லக்ஷ்மிதேவி வைகுண்ட லோகத்திலிருந்து வந்திருக்கிறேன்'' என்றாள். அப்போது கிழவி ''ஓ'' லக்ஷ்மிதேவியா? இவ்வளவு ஆண்டுகளாக நான்உன்னைவழிபட்டுவந்தபோதிலும் நீ வரவே இல்லையே. அப்படிப்பட்ட உன்னை நான் ஏன்என் குடிசைக்குள்வர அனுமதிக்க வேண்டும்?'' என்றுகேட்டாள்.

லக்ஷ்மி தேவியோ ''எங்கும் ஒரே இருட்டாகஇருக்கிறது. இங்கு தான் வெளிச்சம் உள்ளது. எனவே கதவைத் திற நான் உள்ளே வருகிறேன்'' என்று பல முறை கூறினாள். அதனால் கிழவியும் ''நீ இப்போது என் குடிசைக்குள் வந்தால் இனி எப்போதும் இதைவிட்டு போகமாட்டேன்என்றுசத்தியம் செய்தாலே உள்ளேவரலாம்'' என்றாள்.

லக்ஷ்மி தேவியும் அதற்கு இணங்கி குடிசைக்குள்செல்லவே அங்கு பிரகாசமாக ஒளிவீசியது. கிழவிக்கு லக்ஷ்மி தேவியின் கடாட்சம் கிடைத்து விட்டதால் அவளது ஏழ்மை நீங்கியது. எவ்விதக் குறைவும் இல்லாமல்அவள்சுகமாகவாழ்ந்தாள்.



# நனவான கனவு



புத்தூரைச் சேர்ந்த ஐந்து சிறார்கள் சூரியோதய வேளையில் சாத்தூரை நோக்கி வேகவேகமாகக் போய்க் கொண்டிருந் தார்கள். அவர்கள் செல்வது பள்ளிக்கூடத் தில் படிக்கவா? இல்லை. அவ்வூரிலுள்ள பட்டாசுத் தொழிற்சாலையில் வேலை செய்து கூலி பெறத் தான்!

இச் சிறுவர் சிறுமியர் வேலை செய்யும் தொழிற்சாலையின் அதிபர் மருதபாண்டியன் தொழிற்சாலையை அமைத்துவிட்டு துரைசாமி என்பவனை அதை நிர்வகிக்க நியமித்துவிட்டு அயல்நாட்டிற்குச் சென்று விட்டார். அவர் நாட்டில் இல்லாததால் அத் தொழிற்சாலையில் துரைசாமி வைத்தது தான் சட்டம். அவனை எதிர்த்து யாரும் எதுவும் பேசவோ செய்யவோ முடியாது. தொழிற் சாலையில் இளைஞர்களோ அல்லது பெரிய வர்களோ வேலைக்குச் சேர்த்துக் கொள்ளப் படவில்லை. ஏனெனில் அவர்களை ஏமாற்ற வும் முடியாது. தினக்கூலியும் அதிகம் கொடுக்கவேண்டி வரும். சிறுவர்சிறுமியரை வேலைக்கு வைத்துக் கொண்டால் இந்த மாதிரிப் பிரச்சினைகள் எழாமல் இருக்கும்.

மேலும் அப்பகுதி வறட்சியானது. வேறு பெரிய தொழில்கள் கிடையாது. அதனால் ஏழைக்குடும்பத்தினர் தம் குழந்தைகளைப் பள்ளிகளுக்கு அனுப்பாமல் பட்டாசுத் தொழிற்சாலைக்கு அனுப்பி அவர்கள் பெற்றுவரும் ஊதியத்தைக் கொண்டு தம் குடும்பங்களைப் பராமரித்து வந்தனர். இவ்வாறு வேலைக்கு அனுப்பப்பட்டவர்கள் தாம் கந்தன், முருகன், வள்ளி, ஜேம்ஸ், கரீம் என்ற ஐவர். இவர்கள் காலை ஏழுமணிமுதல் மாலை ஆறுமணி வரை வேலை செய்தால் தான் ஒரு தினக்கூலி கிடைக்கும்.

அவர்கள் அன்று பட்டாசுத் தொழிற் சாலைக்குச் சென்று கொண்டிருந்தபோது கரீம் நோயால் அவஸ்தைப்படும் தன் தாய்க்கு எப்படி மருந்து வாங்குவது என்று யோசித்தவாறே சென்று கொண்டிருந்தான்.



-பாபநாசம் சாமா-

அவனது தந்தை சில மாதங்களுககு முன் ஒரு விபத்தில் இறந்து போனார். அதனால் அவன் சம்பாதிக்கும் பணம் தான் அவனது குடும்பத்திற்கு அரை வயிற்றுக் கஞ்சி அளித்து வந்தது.

கந்தனும் முருகனும் ஏதோ ஒரு நாட்டுப் பாடலைப் பாடியவாறே சென்றனர். வள்ளி வழியிலிருந்த ஒரு கொய்யா மரத்திலிருந்த காயைப் பறித்துக் கடித்துத் தின்றவாறே சென்றாள். இவ்வாறாக அவர்கள் ஐவரும் காலை ஏழுமணிக்குள் பட்டாசுத் தொழிற் சாலையை அடைந்து தம் வேலைகளைச் செய்யலானார்கள். இவர்களைப் போலவே சுற்றுப் பக்கத்து கிராமங்களிலிருந்து பல சிறுவர் சிறுமியரும் வந்து அத் தொழிற்சாலை யில் வேலை செய் யலானார்கள்.

ரசாயனப் பொருள்களைக் கலக்கும் கரீமின் கைவிரல்கள் புண்பட்டு வடுக்களைக் கொண்டிருந்தன. இவ் வேலையைச் செய்யும் சிறுவர் களுக்கு ரப்பர் கையுறைகள் கொடுக்கப் படவேண்டும். கரீமிற்கு ஒரு வருடத்திற்கு முன் ஒரு ரப்பர் கையுறை கொடுக்கப்பட்டது. ஆனால் அது இப்போது நைந்து இற்றுப் போய்க்கிழிந்தும் விட்டது. அதுபற்றி கரீம் நிர்வாகி துரைசாமியிடம் கூறியும் அவனுக்கு வேறு கையுறை கொடுக்கப்படவில்லை. வேலை செய்யும் போது கையில் எரிச்சல் ஏற்பட்டது. அதை கரீம் பொறுத்துக்கொள்ள வேண்டித் தான் இருந்தது. அன்று எரிச்சலைத் தாங்க முடியாமல் வேலை செய்வதை நிறுத்தி விட்டு ஒரு மறைவிடத்தில் ஒளிந்து நின்றான்.

அப்போது கதவுக்கு அப்புறமுள்ள அறையில் தொலைபேசி மணி அடிக்கவே நிர்வாகி துரைசாமி அதை எடுத்து ''யாரது?'' என்று கேட்டான். அடுத்த வினாடியே பதறி பணிவாக ''ஐயா! தாங்களா? அயல்நாட்டி லிருந்து வந்து விட்டீர்களா? சரி தொழிற் சாலை கணக்குப் புத்தகங்களா? இன்னும் இரண்டு மணி நேரத்தில் கொண்டுவரு கிறேன்'' என்று பதில் கூறி தொலைபேசி கருவியை டக்கென்று வைத்தான்.

கரீம் துரைசாமி தொலைபேசியில் பேசிய து முழுவதையும் மறைந்திருந்துகேட்டான். துரைசாமி தொழிற்சாலை நன்றாக நடக்கிறது என்றும் தொழிலளார்களுக்கு நல்லசம்பளம் கொடுக்கப்படுகிறது என்று கூறியதையும் கேட்டு மறுமுனை யில் பேசியவர் முதலாளி மருத பாண்டியன் என்றும் அறிந்து கொண் டான். அவன் நிர்வாகியின் பார்வையில் படா மல் தப்பிவந்து ஒரு காகிதத்தை எடுத்து துரைசாமி அத் தொழிற்சாலையில் செய்யும் தில்லு முல்லுகளையும், சிறுவர் சிறுமி யருக்குக் குறைந்த கூலி கொடுத்து நிறைய வேலை செய்யச் சொல் வதையும் விவர மாக எழுதி அடியில கரீம் என்று கையொப்பமும் போட்டான்.



துரைசாமி கணக்குப்புத்தகங்களை எடுத்து தன்மேஜை மீது அடுக்கி வைத்தான். பிறகு தன் அறையிலிருந்து வந்து வேலை செய்யும் சிறுவர் சிறுமியரை ஒன்று கூட்டி ''நம் முதலாளி அயல் நாட்டிலிருந்து வந்துவிட் டார். நாளைக்கோ அல்லது இன்று மாலை யிலோஅவர் இங்கு வரலாம். அதனால் அவரிடம் நீங்களெல்லோரும் உங்களுக்கு நிறையக் கூலி கொடுக்கப்படுவதாயும் நீங்கள் எல்லோரும் திருப்தி அடைந்து சந்தோஷமாக இருப்பதாகவும் சொல்ல வேண்டும். யாராவது இங்குள்ளஉண்மை நிலையைக் கூறினால் அவன் வேலையிலிருந்து நீக்கப்படுவான்'' என்று எச்சரித்தான்.

இவ்வாறு சிறுவர்களின் கூட்டத்தில் துரைசாமி பேசிக் கொண்டிருக்கும் போது கரீம்யார் கண்ணிலும் படாமல் துரைசாமியின் அறைக்குள் போய்தான் எழுதிய கடிதத்தை மேஜைமீது வைக்கப்பட்டிருந்த கணக்குப் புத்தகங்கள் ஒன்றினுள் மறைத்து வைத்து விட்டு வந்து விட்டான். அப்போதும் துரைசாமி பேசிக் கொண்டிருந்தான். பேச்சை முடித்ததும் துரைசாமி சிறுவர்களை வேலை செய்யச் சொல்லி விட்டுத் தன் அறைக்குப் போய்அங்கே அடுக்கி வைத்திருந்த கணக்குப் புத்தகங்களை எடுத்துக் கொண்டு முதலாளி மருதபாண்டியனைப் பார்க்க அவரது வீட்டிற்குச் சென்றான்.

துரைசாமியைக் கண்ட மருதபாண்டின் ''கணக்கெல்லாம் சரியாகத் தானே இருக்கிறது? கொண்டு வந்த கணக்குப் புத்தங்களை அங்கே வைத்துவிட்டுப் போங்கள். தொழிற்சாலை நன்றாகத் தானே நடக்கிறது? நான்நாளை வந்து பார்க்கிறேன்'' என்று கூறி அவனை அனுப்பிவிட்டார்.

துரைசாமி அங்கிருந்து சென்ற பின் அவர் கணக்குப் புத்தகங்களை ஒவ்வொன்றாக பார்க்கும் போது ஒரு கணக்குப் புத்தகத்தில் ஒரு வெள்ளைத்தாள் மடித்து வைக்கப்பட்டிருந்ததைக் கண்டார். அது கரீம் எழுதிய கடிதம். அதைப் படித்ததும் அவருக்கு துரைசாமியின் மீது மிகுந்த கோபம் ஏற்பட்டது.

அன்று மாலையே ஐந்து மணிக்கு மேல் மருதுபாண்டியன் தம் பட்டாசுத் தொழிற்சாலைக்குச் சென்றார். அப்போதுஅங்கு சிறுவர்சிறுமியர் மட்டுமே வேலை செய்வது தெரிந்தது. வாலிபர்களோ பெரியவர்களோ யாரும் இல்லை. அவர் துரைசாமியை அழைத்து ''என்ன இது? சிறுவர் சிறுமியரை இம்மாதிரி தொழிற்சாலைகளில் வேலைக்கு அமர்த்துவது சட்டப்படி குற்றமாயிற்றே. நாளை முதல் இங்கு பதினெட்டு வயதிற்கு மேலானவர்கள் தாம் வேலைக்கு நியமிக்கப் பட வேண்டும். இந்தச் சிறுவர் சிறுமியர் பள்ளிக் கூடங்களில் சேர்ந்து படிக்க வேண்டியர்கள். இவர்கள் வேலை செய்யக்கூடாது. இவர்களுக்காகப் பள்ளிக்கூடம் அமைத்து படிக்க எல்லா வசதிகளும் செய்து கொடுக்கப் போகிறேன். நாளை முதல் இவர்களெல்லாம் அங்கே தான் போக வேண்டும். இங்கே வரக் கூடாது'' என்றார்.

சிறுவர், சிறுமியர் இதைக் கேட்டுக் கைதட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள். அப்போது அவர் ''உங்களில் கரீம் என்பவன் யார்''? என்று கேட்கவே கரீமும் அவர் முன் வந்து நின்றான். அவர் அவனது முதுகைத் தட்டி'' துணிச்சலுடன் நீ எழுதிய கடிதம் தான் எனக்கு உண்மை நிலையை எடுத்துக் காட்டியது. இதற்காக உன்னைப் பாராட்டுகிறேன். அடுத்தவாரம் தீபாவளி வரப்போகிறது. உங்கள் எல்லோருக்கும் தீபாவளிப் பரிசாக துணிகளும், பட்டாசும் வைத்திருப்பதோடு ஒவ்வொருவருக்கும் நூறு ரூபாய் கொடுக்கவும் ஏற்பாடு செய்திருக்கிறேன். இனிமேல் தொழிற்சாலை நிர்வாகம் என்னிடம் இருக்கும். எனவே நீங்கள் பள்ளியில் படியுங்கள். உங்கள் வீட்டிலுள்ள பெரியவர்களை வேலை செய்ய இங்கே அனுப்புங்கள்'' என்றார்.

சிறுவர் சிறுமியரின் கனவு நனவாகியது!



எஸ்.சோபினி

# யுவான்சியோ வீட்டிற்குப் போன விதம்!




வெகுகாலத்திற்கு முன் சீனாவை ஊடு என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனுடைய அரண்மனையில் யுவான்சியோ என்ற பணிப் பெண் வேலை செய்து வந்தாள். அவள் நாள் முழுவதும் தொடர்ந்து வேலை செய்தே ஆக வேண்டும். ஓய்வு, விடுமுறை என்று எதுவும் கிடையாது. அதனால் அவள் தன் குடும்பத்தவரைப் பார்க்க வேண்டுமென ஏங்கலானாள். ஆனால் பணியாளர்கள் அரண்மனையை விட்டு வெளியே போகக் கூடாது என்பது சட்டம். அது கடுமையாக அமல் படுத்தப் பட்டது.

யுவான் சியோவுக்கு டாங்பாங்ஷோ என்ற அமைச்சர் நண்பர். அவர் என்ன சொன்னாலும் மன்னன் கேட்டு அதன்படி நடப்பான். யுவான் சியோ தயாரிக்கும் சந்திரவடிவுப் பணியாரம் அந்த அமைச்சருக்கு மிகவும் பிடிக்கும். அதனால் அவர் அடிக்கடி வந்து யுவான் சியோவைக் கண்டு பேசி அவள் கொடுக்கும் அப்பணியாரங்களை ரசித்துத் தின்று விட்டுச் செல்வது வழக்கம்.

ஒரு முறை யுவான்சியோ அவரிடம் தான் தன் குடும்பத்தவரைப் பார்க்கப் போக வேண்டுமென்று ஆசைப்படுவதாகக் கூறினாள். அரண்மனைச்சட்டம் இதற்கு வழி கொடாதே என யோசித்த அவர் அவள் மீது இரக்கப்பட்டு யோசித்து அதற்கு ஒரு யுக்தி செய்தார்.

அவர் மன்னனைக் கண்டு ''அரசே! சொர்க்கத்து தெய்வம் நெருப்பு தேவனிடம் புத்தாண்டின் முதல் மாதத்துப் பதினைந்தாவது நாளன்று நம் நகரை எரித்து விடும் படிக் கட்டளை இட்டிருக்கிறார். நாம் நம் நகரைக் காக்க வேண்டும். எல்லோரும் அவரவர் குடும்பத்தில் சேர்ந்து இருந்து, சிவப்பு விளக்குகளை இரவு முழுவதும் எரித்துப் பட்டாசுகளை வெடிக்க வேண்டும். இதனால் நெருப்பு

தேவன் மகிழ்ந்து நமக்குக் கெடுதல் செய்யாமல் இருந்து விடுவான்'' என்றார்.

அத்துடன் நெருப்புதேவனுக்கு சந்திரவடிவுப் பணியாரங்களைச் செய்து படைக்க வேண்டும் என்றும் அவர் கூறினார். எனவே அரண்மனையில் அப்பணியாரங்களைச் செய்யும் பொறுப்பு யுவான் சியோவிடம் ஒப்படைக்கப்பட்டது. அது போல நகர மக்கள் யாவரும் செய்ய வேண்டுமென மன்னன் உத்திரவிட்டான்.

அமைச்சர் குறிப்பிட்ட நாளின் இரவில் மக்கள் விளக்குகள் ஏற்றி, பட்டாசுகள் வெடித்து சந்திரவடிவுப் பணியாரங்கள் செய்து தின்று மகிழ்ந்தனர். ஆம்! அந்த நகருக்கு எவ்விதத் தீங்கும் ஏற்படவில்லை. இதனால் யுவான் சியோ தன் குடும்பத்தவருடன் சேர்ந்து மகிழ்ந்து இருக்க முடிந்தது.

இதைக்கண்டு மகிழ்ந்த மன்னன் ஒவ்வொரு ஆண்டிலும் அந்தக் குறிப்பிட்ட நாளில் விளக்குகளை ஏற்றி, பட்டாசுகளை வெடித்து, பணியாரங்கள் செய்து, நெருப்பு தேவனுக்குப் படைக்க வேண்டுமென்று கட்டளைஇட்டான். அதனால், ஒவ்வொரு ஆண்டிலும் குடும்பத்தவர் யாவரும் ஒன்று சேர்ந்து அந்தப் புத்தாண்டின் ஆரம்பத்தை விளக்குகள் விழாவாக மக்கள் கொண்டாடி வரலானார்கள்.

இந்தப் புத்தாண்டு விழா வசந்தோற்சவம் என்று பல நாட்களுக்குக் கொண்டாடப்படுகிறது. புத்தாண்டு பிறப்பதற்கு இருபது நாட்களுக்கு முன்பே வீட்டை வெள்ளை அடித்துப் பழைய பொருள்களைத் தூக்கி எறிந்து விட்டுப் புத்தாடைகள் வாங்கி வைத்தும், பாத்திரங்களைப் பளபளவெனத் தேய்த்தும் வைத்துக் கொள்கிறார்கள். புத்தாண்டு பிறக்கும் போது எல்லாம்



சுத்தமாக இருந்தாலே செல்வம் வீட்டில் தங்கும் என்று மக்கள் நம்புகிறார்கள்.

பலவித உணவுப் பண்டங்கள் இச் சமயம் தயாரிக்கப்படுகின்றன. எட்டுவித மாமிச பதார்த்தங்கள் செய்யப்படுகின்றன. புத்தாண்டில் ஒரு குடும்பத்தவர் பிரிந்து எங்கிருந்தாலும் வந்து, ஒன்று சேர்ந்து, இவ் விழாவைக்



கொண்டாடுகிறார்கள்.

சிறுவர்கள் சிவப்பு உறைகளில் போடப்பட்ட பணத்தை பெரியவர்களிடமிருந்து பெறுகிறார்கள். விளக்கு களை ஏற்றி பட்டாசுகளை வெடிப்பதால் துர்குண தேவதைகள் தம்மை அணுகா என்றும் மக்கள் நம்புகிறார்கள். இந்த விழா கொண்டாடி மறு நாள் யாவரும் நண்பர்களையும், உறவினர்களையும் சந்தித்துத் தம் நல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறார்கள்.

வணிகர்கள் தம் பழங் கணக்குகளை முடித்துவிட்டு புத்தாண்டு தினத்தில் புதிய கணக்கை ஆரம்பிக்கிறார்கள். இந்த வழக்கம் நம் நாட்டிலும் சில பகுதிகளில் உள்ளது. புத்தாண்டு பிறந்த பின் பதினைந்தாவது நாளில் விளக்கு விழா கொண்டாடப்படுகிறது. இந்த ஆண்டின் முதல் பௌர்ணமி இரவில் சொர்க்கவாசிகள் வான வீதியில் நடமாடுவதைக் காண முடியும் என்று மக்கள் கருதுகிறார்கள்.

அதனால் தான் அவர்கள் விளக்குகளை ஏற்றி வானத்தைப் பார்க்கிறார்கள். பௌர்ணமி நிலா வடிவில் இந்நாளில் ஒருவகைப் பணியாரம் செய்து சாப்பிடுகிறார்கள். இதற்கு யுவான்சியாவோ என்று பெயர்.

இந்த விழாவில் ராட்சஸ மலைப் பாம்பின் நீளமான உருவம் செய்யப்படுகிறது. அதன் கண்கள் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும்படி அமைக்கப்படுகின்றன. இந்த நீளமலைப் பாம்பு தெருக்களில் மேளதாளத்துடன் இழுத்துச் செல்லப்படுகிறது. இப்படிச் செய்து புத்தாண்டு விழாவை முடிவுக்குக் கொண்டு வருகிறார்கள்.

## ஒரே திகைப்பு!

இந்த விஷமக்காரப் பையன் தன் எதிர் முனையிலுள்ள பட்டாசை எடுக்கப் போக வேண்டும். இடையில் வெடிகளுக்கு அகப்படாமல் அவன் பட்டாசை அடைய வழி காட்டுங்கள்.



### உங்களுக்குத் தெரியுமா?

- விக்கிரம ஆண்டு என ஆரம்பமானது. தீபாவளி தினத்தில் தான் இது ஆரம்பமானது கி.மு.58ல். வரலாற்று வல்லுனர்கள் இந்த ஆண்டின் ஆரம்பம் வட இந்தியாவின் பல பகுதிகளை ஆண்ட விக்கிரமாதித்த மன்னனின் நினைவாகத்தான் என்கிறார்கள். அப்பகுதிகளில் மக்கள் விக்கிரம ஆண்டைத் தான் பயன் படுத்தி தீபாவளி நாளைப் புத்தாண்டு பிறக்கும் நாளாகக் கொண்டாடுகிறார்கள்.
- ஜைனமதத்தை நிறுவிய மகாவீரர் நிர்வாணமுக்தி அடைந்தது தீபாவளி நாளில்தான். எனவே ஜைனர்கள் இந்த நாளை தேவ தீபாவளி என்கிறார்கள். அன்று அவர்கள் இனிப்புகளை வழங்கி விளக்குகளை ஏற்றி தம் வேத மந்திரங்களை உச்சரிக்கிறார்கள். தேவ தீபாவளியன்று நள்ளிரவிலும், மறுநாள் விடியற் காலையிலும் மகாவீரரை பக்தி சிரத்தையுடன் வழிபடுகிறார்கள்.
- மேற்கு வங்காளத்தில் தீபாவளியன்று காளி பூஜை நாளும் சேர்கிறது. இந்தப் பூஜை துர்க்கா தேவியை வழிபடும் சியாம பூஜை எனவும் கூறப்படுகிறது.

## தீபாவளி பூச்சுடர்

இந்த விளையாட்டை இருவரோ அல்லது அதற்கு மேலும் சிலரோ விளையாடலாம். இதை ஆரம்பிக்க உருட்டும் காயில் ''ஆறு'' என்னும் எண் இருக்க வேண்டும். கொடுக்கப் பட்டுள்ள விதிகளின்படி காயைக் குறிப்பிட்ட வழியில் நகர்த்திக் கொண்டே செல்லவும்.

மகிழ்ச்சிகர தீபாவளி

START

1 2 3 4 5 6 7 8 9 10 11 12 13 14 15 16 17 18 19 20 21 22 23 24 25 26 27 28 29 30 31 32 33 34

MISS A TURN

GO TO 3

GO TO 27

GO TO 21

GO TO 20

GO TO 22

MISS A TURN

SORRY GO TO START

## வண்ணமாக்கும் விநோதம்!

சிறுவன் நசிகேதன் பிறப்பு, இறப்பு பற்றிய புதிர் வினாக்களைக் கேட்டு எமதர்மராஜனை மலைக்க வைக்கிறான். இந்த வினா விடை நிகழ்ச்சி நசிகேதனுக்கும் எமதர்மனுக்குமிடையே தீபாவளி நாளில் நிகழ்ந்ததாம். இதோ இந்தச் சித்திரத்தை கண் கவர் வண்ணங்களால் மிளிரச் செய்யுங்கள் பார்க்கலாம்.





## 57. இராவந்தனின் மரணம்

# மகாபாரதம்

அன்று போரின் ஏழாவது நாள். காலையில் கௌரவப்படைகளை பீஷ்மர் மண்டல வியூகத்தில் நிறுத்தினார். திருதராஷ்டிரனின் மைந்தர்கள் ரதங்களுடனும், யானைகளுடனும், காலாட்களுடனும் பீஷ்மரைச் சுற்றிலும் பாதுகாப்பாக இருந்தார்கள்.

கௌரவப் படைகள் மண்டல வியூகத்தில் அமைக்கப்பட்டிருப்பதைக் கண்டு தருமர் தம் படைகளை வஜ்ஜிர வியூகமாக்கி நிறுத்தினார். போர் ஆரம்பமாகியது. இரு தரப்பினரும் ஒருவர் வியூகத்தை மற்றவர் துளைத்துக் கலைக்க முயன்றனர். துரோணர் விராடனையும், அசுவத்தாமா சிகண்டியையும், நகுலனும் சகாதேவனும் தம் தாய் மாமனான சல்லியனையும், விந்தானுவிந்தர்கள் இராவந்தனையும், கௌரவ வீரர்கள் அர்ஜுனனையும் கிருதவர்மன் பீமனையும், அபிமன்யு திருதராஷ்டிரனின் புதல்வர்களான சித்திரசேனன், விகர்ணன், துர்மரணன் முதலியவர்களையும் அலம்பசன் சாத்தியகியையும் பூரிசிரவஸ் திருஷ்டகேதுவையையும், தருமர் சுருதாயுவையும் எதிர்த்துச் போரிட்டனர்.

அர்ஜுனன் மீது கௌரவ வீரர்கள் அம்பு மாரி பெய்து தாக்கினார்கள். அர்ஜுனன் ஐந்திராஸ்திரத்தை எய்து தன்னை எதிர்த்தவர்களை அடித்து விரட்டினான். அந்த வீரர்கள் ஓடி பீஷ்மரின் பின்னால் போய் நின்றார்கள்.





அவர்களிடம் துரியோதனன் ''பயப் படாதீர்கள். பீஷ்மர் அர்ஜுனனை பயங் கரமாகத் தாக்கப் போகிறார். நீங்கள் அனைவரும் அவருக்கு உறுதுணையாக இருங்கள்'' என்று கூறி உற்சாக மூட்டினான்.

பீஷ்மரும் உடனேயே அர்ஜுன னைத் தாக்க ஆரம்பித்தார். இச்சமயத் தில் விராடனுடன் போர் புரிந்து கொண்டிருந்த துரோணர் அவனது தேரோட்டியையும், தேர்க்குதிரைகளை யும் அடித்துக் கொன்றார். அப்போது விராடன் ஓடிப் போய்த் தன் மகன் சங்கனின் ரதத்தில் ஏறிக் கொண்டான். தந்தையும் மகனும் சேர்ந்து துரோண ரைத் தாக்கினார்கள். துரோணரோ அம்பை எய்து சங்கனைக் கொன்று வீழ்த்தவே விராடன் பயந்து ஓடி விட்டான்.

இது போலவே அசுவத்தாமன் சிகண்டியுடன் போராடி அவனது தேரோட்டியையும் தேர்க்குதிரைகளை யும் அடித்துக் கொன்றான். அப்போது சிகண்டி வாளை உருவி எடுத்துக் கொண்டு அசுவத்தாமனின் தாக்குதல் களைச் சமாளிக்கலானான். ஆனால் தாக்குதலில் அவனது வாள் முறிந்து விடவே ஓடிந்த வாளை அசுவத்தாம னின் மீது வீசி எறிந்து விட்டு ஓடிப் போனான்.

அலம்பசனுடன் சாத்தியகி கடும் போர் புரிந்தான். ராட்சஸனான அலம்பசன் மாயப் போர் புரியவே, சாத்தியகி அர்ஜுனன் கொடுத்திருந்த ஐந்திராஸ்திரத்தை எய்தான். அதன்முன் நிற்க முடியாமல் அலம்பசன் ஓடிப் போனான். இதே சமயம் திருஷ்டத்யும் னன் துரியோதனனைக் கடுமையாகத் தாக்கினான். துரியோதனனை காயப் படுத்தி அவனது தேர்க்குதிரைகளைக் கொன்றான். துரியோதனன் வேறொரு ரதத்தில் ஏறி திருஷ்டத்யும்னனைக் கடுமையாகத் தாக்கினான். ஆனால் சகுனி இடையில் புகுந்து துரியோதன னை வேறு பக்கமாக அழைத்துச் சென்றான்.

பீமன் கிருதவர்மனைக் கடுமை யாகத் தாக்கவே அவன் தன் அத்தான் விருஷகனின் தேரில் ஏறிக் கொண் டான். ஏனெனில் பீமன் அவனது தேரோட்டியையும் தேர்க்குதிரைகளை யும் கொன்று விட்டான். உலூகனுக்கும் விந்தானுவிந்தர்களுக்கும் நடந்த போரில் உலூகன் அவர்களை அடித்துத் துரத்தி விட்டான்.

கடோத்கசனுக்கும் பகதத்தனுக்குமி டையே நடந்த போர் மிக பயங்கரமாக

இருந்தது. பகதத்தன் ஒரு யானை மீது அமர்ந்து வந்து பாண்டவர் படைகளைக் கலக்கிக் கொண்டிருந்தான். அதனால் பாண்டவப் படை வீரர்கள் பயந்து ஓடலாயினர். அது கண்டு கடோத்கசன் பகதத்தன் மீது அம்புகளை எய்தும் பயனளிக்கவில்லை. பகதத்தனின் தாக்குதல் கடுமையாகவே கடோத்கசன் போர்க்களத்திலிருந்து பின் வாங்கினான்.

அபிமன்யுவுக்கும் திருதராஷ்டிரனின் புதல்வர்களுக்குமிடையே நடந்த போரில் அபிமன்யு சித்திசேனன், விகர்ணன், துர்மரணன் ஆகியோரின் ரதங்களைச் சேதப்படுத்தினான். இது கண்டு கௌரவப் படை வீரர்கள் அபிமன்யுவைத் தாக்கவே, அவனுக்கு உதவ அர்ஜுனன் விரைந்து வந்தான். அவனது அம்புகளால் சுசர்மனின் உறவினர்கள் பலர் பலியானார்கள். அதன்பின் அவன் பீஷ்மரை எதிர்க்கச் சென்றான். வழியில் அவனை துரியோதனன், சைந்தவன் முதலானோர் தடுத்து நிறுத்த முயன்றும் அம்முயற்சி பலிக்கவில்லை.

அர்ஜுனனோடு தருமர் பீமன் நகுலன், சகாதேவன் ஆகியோரும் பீஷ்மரைத் தாக்கச் சென்றனர். இப்படியாகப் பாண்டவர்கள் ஐவரும் ஒன்று சேர்ந்து பீஷ்மரைத் தாக்கியும் அவர் சளைக்கவில்லை. பாண்டவர்களின் கவனத்தைத் திருப்ப சைந்தவன் பீஷ்மரின் பக்கம் சென்றான். துரியோதனன் தருமரைத் தாக்கினான். நகுலனையும் சகாதேவனையும் தன் அம்புகளால் அடித்தான். சல்லியன் முதலியோரும் பாண்டவர்களைத் தாக்கலானார்கள்.




அப்போது தருமர் சிகண்டியிடம் ''நீ பீஷ்மரைக் கொல்வதாகக் கூறினாயே. இப்போது பார்! பீஷ்மர் நம்மை கதிகலங்க அடித்துக் கொண்டிருக்கிறார். அதனால் அவரை மிரட்ட நீ போய் அவர் முன் நில்'' என்றார். அது கேட்டு சிகண்டியும் பீஷ்மருடன் போர்புரிய அவர் முன் போய் நின்றான். அவன் போகும் போது சல்லியன் அக்கினி அஸ்திரத்தை எய்ய, சிகண்டி அதை வருணாஸ்திரம் கொண்டு அணைத்து விட்டுச் சென்றான்.

பீஷ்மர் தருமரின் தேர்க் கொடியை அறுத்து அவரது வில்லை சேதப்படுத்தினார். தருமர் பயந்து போனார். சிகண்டியோ பீஷ்மரின் முன் வந்து ''நில் வா. போருக்கு'' எனவே பீஷ்மர் அவனோடு போர் புரியாமல் விலகிச் சென்றார். அப்போது பீமன் தன் கதை



னும் சாத்தியகியும் அன்றையப் போரில் கௌரவப்படைகளுக்கு பலத்த சேதத்தை விளைவித்தனர். அர்ஜுனன் சுசர்மன் முதலோரை தோற்கடித்தான். பீமனது தாக்குதலை எதிர்த்து சமாளிக்க முடியாமல் துரியோதனன் பின்வாங்கினான். இப்படியாக அன்றையப் போரில் பாண்டவர்கள் கை ஓங்கி இருந்தது.

இரு தரப்பினரும் போர் முடிந்த பின் தம் கூடாரங்களுக்குப் போய்த் தம் உடல்களில் ஏற்பட்டிருந்த காயங்களைக் கழுவி மருந்து போட்டுக் கொண்டார்கள். அதன் பின் அவர்கள் படுத்தவாறே மறு நாள் போர் பற்றி யோசித்துக் கொண்டே கண்ணை மூடினார்கள்.

மறுநாள் காலையில் எழுந்து இரு தரப்பினரும் போருக்கு ஆயத்தமானார்கள். இருவரும் தாம் போர்புரிவதற்கான வியூகங்களை அமைத்தார்கள். பீஷ்மர் ஆரம்பத்திலேயே தம் தாக்குதலைக் கடுமையாக்கினார். அது கண்டு தருமர் அவரைத் தாக்கும்படித் தம் படையினரிடம் கூறினார். பீஷ்மர் சோமகர்களையும், சிருஞ்சயர்களையும் பாஞ்சாலகர்களையும் அடித்து விரட்டினார். அவருக்கு எதிரில் துணிவுடன் போர்புரிய நின்றவன் பீமன் ஒருவனே. அவனும், பீஷ்மரைப் போலவே பயங்கரமாக தாக்குதலை நடத்தி பீஷ்மரின் தேரோட்டியை அடித்து வீழ்த்தினான். அவரது ரதத்தை சேதப்படுத்தினான். பீஷ்மரின் அருகே இருந்த திருதராஷ்டிரனின் மகனான சுநாபன் என்பவனைத் தன் அம்பால் கொன்றான்.

யால் சைந்தவனைத் தாக்கிக் கொண்டிருந்தான். சைந்தவன் பதிலுக்கு பீமனின் தேர்க்குதிரைகளைத் தாக்கி அடித்து வீழ்த்தினான். துரியோதனனும் பீமனைத் தாக்க சைந்தவனுடன் சேர்ந்து கொண்டான். பீமனோ தன் கதையால் துரியோதனனை பயங்கரமாகத் தாக்கவே, அது கண்டு கௌரவப்படை வீரர்கள் பயந்து ஓடினார்கள். பீமனின் கதையால் அடிபட்டுத் தப்பி ஓடிய சித்திரசேனனை கௌரவர்கள் பாராட்டினார்கள். திருதராஷ்டிரனின் மற்றொரு புதல்வனான விகர்ணன் சித்திரசேனனைத் தன் தேரில் ஏற்றிக் கொண்டு வேறிடத்திற்குக் கொண்டு சென்றான்.

சூரியன் மறையும் நேரம் வந்து விடவே போர் நின்றது. திருஷ்டத்யும்ன



இது கண்டு திருதராஷ்டிரனின் மற்ற புதல்வர்களான ஆதித்த கேது, பஹ்வாளி, குண்டதாரன், மஹோதரன், பண்டிதகன், பீமனைத்தாக்கினார்கள். பீமன் அந்த எழுவரையும் தன் அம்புகளால் அடித்துக் கொன்றான். இதனால் துரியோதனனும் அவனது மற்ற தம்பிகளும் கண்ணீர் வடித்தார்கள். துரியோதனன் பீஷ்மரிடம் போய் ''பாட்டனாரே என் தம்பிகளை இந்த பீமன் கொன்று தள்ளிக் கொண்டே இருக்கிறான். நம் வீரர்களில் பலரையும் அவன் அடித்துக் கொன்று கொண்டிருக்கிறான். நீங்கள் இவற்றை எல்லாம் கவனித்தும் ஒன்றும் செய்யாமல் இருக்கிறீர்களே'' என்று வேதனைப் பட்டவாறே கூறினான்.

அதைக் கேட்ட பீஷ்மர் அழுது கொண்டிருக்கும் துரியோதனனிடம் ''துரியோதனா! இப்படி எல்லாம் நடக்கும் என்று உனக்குத் தெரியாதா? நாங்கள் எல்லோரும் உனக்கு எடுத்துக் கூறினோமே. பீமன் உன் தம்பிகள் யார்கிடைத்தாலும் கொல்லாமல் விட மாட்டான். நானும் துரோணரும் வேறு வழி இல்லாமல் கட்டுண்டு இந்தப் போரில் ஈடுபட்டிருக்கிறோம். நீயே உன் பலத்தால் பாண்டவர்களைத் தோற்கடித்து வெற்றி பெற வேண்டும்'' என்று சற்று வெறுப்புடன் கூறினார்.

உச்சிவேளைக்குப் போர் மேலும் தீவிரம் அடைந்தது. கடும் போர் புரிந்து கொண்டிருந்த பீஷ்மரை திருஷ்டத்யும்னனும் சாத்தியகியும், சிகண்டியும் தம் படைகளோடு வந்து தாக்கலானார்கள். விராடனும் துருபதனும், சோமகர்களும் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். வேறொருபுறத்திலிருந்து கேகயர்களும், திருஷ்டகேதுவும், குந்திபோஜனும் தம் படைகளோடு வந்து பீஷ்மரை நெருங்கினார்கள். அர்ஜுனனும், உப பாண்டவர்களும், சேகிதானனும் வேறொரு புறத்தில் கௌரவப் படைகளை அடித்து விரட்டிக் கொண்டிருந்தார்கள்.

இன்னொரு பக்கத்தில் பீமனும், அபிமன்யுவும் கடோத்கசனும் கௌரவப் படைகளைத் தாக்கி அழித்துக் கொண்டிருந்தார்கள்.

கௌரவப் படை வீரர்களும் சளைத்து விடவில்லை. துரோணர் சோமகர்களையும், சிருஞ்சயர்களையும் தாக்கி அவர்களில் பலரைக் கொன்றார். இறக்கும் போது வீரர்கள் போட்ட


Sankar

கூச்சலும் மரண ஒலியும் பயங்கரமாக இருந்தன. இச்சமயத்தில் அர்ஜுனனின் மகனான இராவந்தன் கௌரவப் படையைக் கொடூரமாகத் தாக்கினான்.

இராவந்தனின் தாய் நாகராஜனான ஐராவதனின் மகள். அவளது கணவனைக் கருடன் கொன்று விட்டான். அதனால் அவள் அர்ஜுனனிடம் வந்து சேர்ந்தாள். அவள் அர்ஜுனனை விரும்பி அவனுடன் வாழ்ந்து இராவந்தனைப் பெற்றெடுத்தாள். தன் மகனுடன் அவள் நாகலோகத்திற்குப் போய் அவனை அங்கேயே வளர்த்து வந்தாள். ஆனால் அவனது சிற்றப்பன் அசுவசேனன் அர்ஜுனன் மீது துவேஷம் கொண்டவன். அதனால் அவன் இராவந்தனை நாகலோகத்திலிருந்து துரத்தி விட்டான்.

அச்சமயத்தில் அர்ஜுனன் இந்திர லோகத்தில் இருந்தான். அதைத் தெரிந்து கொண்டு இராவந்தன் அங்கு சென்றான். அவன் அர்ஜுனனைக் கண்டு தன்னைப் பற்றி விவரமாகக் கூறினான். அர்ஜுனனும் தன் மகனைப் பார்த்து மிகவும் மகிழ்ந்து போனான். போர் மூளும் போது பாண்டவர்களோடு சேர்ந்து கௌரவர்களை எதிர்க்க வேண்டும் என்று அர்ஜுனன் கூறி இருந்ததால் அவன் போர் புரியப் போர்க் களத்திற்கு பெரிய குதிரைப் படையுடன் வந்தான்.

அவன் கௌரவப் படையைத் தாக்கி அழித்துக் கொண்டிருக்கையில் அவனை எதிர்க்க சகுனியின் தம்பியான கஜனும், கவாட்சனும், விருஷபனும், சர்மவந்தனும், அர்ஜவனும், சுகனும் வந்தார்கள். இராவந்தன் விருஷபனைத் தவிர மற்ற எல்லோரையும் தன் வாளுக்கு இரையாக்கினான். இது கண்டு துரியோதனன் இராவந்தனைத் தாக்க அர்ய சிருங்கன் என்ற ராட்சஸனை அனுப்பினான். அவர்களிடையே வெகு நேரம்வரை கடும் போர் நிகழ்ந்தது. அரிய சிருங்கன் இராவந்தனை அடித்து வீழ்த்தித் தன் வாளால் அவனைக் குத்திக் கொன்றான். இதைக் கண்டு கௌரவர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள்.




THE AMUL CHEESE BOY
IN PICNIC PANIC


One bright sunny day...


...a picnic is in progress.


Little Munnu Verma crawls away.
GURGLE


Suddenly, huge rocks come tumbling down the mountain.
RUMBLE


Amul cheese boy eats an Amul cheese slice...


...and becomes strong and powerful.


He smashes the falling rocks...
BANG


...reducing them to small pieces.
CRACK


Munnu is rescued and back with his family.


All thanks to the cheese that has more milk in it.


Amul cheese slices.
Amul cheese. Yes please!
Amul




11

(கௌண்டனிய நாட்டுத் தலைநகரில் ஓரிடத்தில் குழி தோண்டுகையில் ஒரு அபூர்வ தங்க சிம்மாசனம் வெளிப்பட்டது. விஜயதத்தன் பட்டம் கட்டிக் கொள்ள அதின் மீது உட்கார, அதன் படிகளில் ஏறும் போது முதலிரண்டு படிப் பதுமைகள் கதைகள் கூறி, அவற்றில் கேள்விகளைக் கேட்டன. விஜயன் சரியான பதில் கூறவே, அவனை மூன்றாவது படிக்குப் போக அனுமதித்தன. மூன்றாவது படிப்பதுமை கூறிக் கொண்டிருக்கும் கதையை அவன் கேட்டுக் கொண்டிருந்தான். அப்போது–)

நியாயவர்த்தன மன்னன் ரத்தின குப்தனுக்கும் மனிகர்ணனுக்கும் அறிவுரைகள் கூறி அனுப்பி பின் அன்றைய வழக்கு விசாரணைகள் முடிந்தன. அவற்றைக் கவனமாகப் பார்த்தும், கேட்டுக்கொண்டும் இருந்த குமாரகேது அவைபற்றி ஆழ்ந்து யோசித்தான்.

இரவில் இருவரும் உணவருந்தியபின் மன்னர் குமாரகேதுவிடம் "காலையில் நடந்த வழக்கு விசாரணைகளை கவனித்தாயா? உனக்கு ஒரு விஷயத்தைக் கூறுகிறேன், கேட்டுக்கொள். வணிகப் பிரமுகன் ரத்தின குப்தனுக்கு ஒரே மகன்தான் இருக்கிறான். அவன்பெயர் ஹேமகுப்தன். அவன் சூதாடி, குடிகாரன், ஊர்சுற்றி. கெட்டவன். தந்தை ஒரு வாரத்தில் சம்பாதிக்கும்



பணத்தை இவன் ஒரே மணி நேரத்தில் போக்கடித்து விடுவான். இதுதான் விஷயம்'' என்று கூறி ''இன்று நடந்த விசாரணைகள் பற்றிய உன் விமரிசனம் என்ன? அதைச் சொல்'' என்றார். அப்போது குமாரகேதுவின் முகம் மலர்ந்தது.

மூன்றாவது பதுமை இதுவரை சொல்லி விட்டு விஜயதத்தனிடம் 'இளவரசனே! நியாயவர்த்தனனிடமுள்ள விசாரணைத் திறன் உன்னிடம் உள்ளதா? இருந்தால் அவரது விசாரணை பற்றி நீயே விமரிசனம் செய். சரியாக நீ கூறிவிட்டால், யாவருக்கும் கிடைத்தற்கரிய அற்புத தங்க சிம்மாசனத் தில் தங்கு தடையின்றி நீ அமரலாம். இத்துடன் மந்திர சக்தி வாய்ந்த வாளும் உனக்குக் கிடைக்கும். நீ மட்டும் சரியாகச் சொல்லா விட்டால், நீ இதுவரை பட்ட சிரமமெல்லாம் வீணாகி, இந்தத் தங்க சிம்மாசனம் உனக்குக் கிடைக்காமல் மாய மாகிப் போய் அது முன்பிருந்த இடத்திற்கே சென்று விடும். எனவே நீ முயன்றுபார். வெற்றி தேவதை உன்னைத் தழுவுகிறாதா என்று பார்ப்போம்'' எனக்கூறி விஜயதத்தன் பதில் கூற அவகாசம் அளித்தது.

விஜயதத்தனும் அப்பதுமை சொன்னதை கவனமாகக் கேட்டான். பிறகு அவன் ''நியாய சக்திப் பதுமையே! என் அறிவு கூர்மை பற்றியோ, அலசி விமர்சனம் செய்யும் ஆற்றல்பற்றி நானே கூறிக் கொள்வது சரியல்ல. முறையும் அல்ல. நான் எனது கருத்தை முழுவதுமாகச் சொல்லி முடித்ததும் என் திறமை எப்படிப் பட்டது என்று தீர்மானிக்க வேண்டியது நீதான். இனி நான் சொல்ல வேண்டியதைக் கூறுகிறேன்'' என்று சொல்லித் தொடர்ந்தான்.

''மனிதர்களை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். உயர்ந்தோர், இடைநிலைப் பட்டவர், கடைநிலையாளர். என்பன அவை ஒரு மனிதனை அவனது அறிவையும் செயலையும் கொண்டு இம் மூன்று வகையில் எந்த வகையைச் சேர்ந்தவன் என்று கூறி விடலாம். நியாயம் கோரி வந்த வர்த்தகர்கள் இந்த மூன்று வகைகளில் எந்த வகையைச் சேர்ந்தவர்கள் என்பதை நிர்ணயிக்கும் திறன் ஒரு மன்னனுக்கு இருக்க வேண்டும். அப்போது தான் அவனால் சரியான தீர்ப்பை வழங்க முடியும். உயர்ந்தோருக்கு ஒரு சொல் கூறினாலே

போதும். இடைநிலைப்பட்டவனுக்குசற்று விளக்கி சிறு தண்டனைவிதித்தால் போதும். கடைநிலையாளர்ஒருசிறு பாம்பிற்குச்சமம் சிறு பாம்பானாலும் அதனைப் பெரிய தடி கொண்டு அடிப்பதுபோல இவனது குற்றம் சிறியதாக இருந்தாலும் அவனைப் பயமுறுத்தும் விதத்தில் தண்டனை அளிக்க வேண்டும்.

தன்மானமுள்ளவர் சிறு குற்றம் செய்தாலும் மனம் குமுறிப் போவார். சூழ்நிலை காரணமாக எதற்கோ ஆசைப் பட்டுத் தவறு புரிபவன் கொஞ்ச நேரம் கழித்துத் தான் செய்தவற்றைப் பற்றி யோசித்து வருந்தி அதை ஒப்புக்கொள்பவன் இடை நிலையைச் சேர்ந்தவன். தான் செய்த தவறுக்காக வருந்தாமல் அதைச் செய்வதை ஒப்புக்கொள்ளாதவன்கடைநிலையைச்சேர்ந்த கயவன். தன்னிடம் நியாயம் கோரி வருபவர்கள் இந்த மூன்று பிரிவுகளில் எந்தப் பிரிவைச் சேர்ந்தவர்கள் என மன்னன் அறிந்து கொண்டே தீர்ப்பு கூற வேண்டும்.

மன்னன் தன் நாட்டின் பிரமுகர்களைப் பற்றிய விவரங்களை அவ்வப்போது சேகரித் துத் தெரிந்து வைத்துக் கொள்ள வேண்டும். அவர்களது வாழும் முறை, அவர்களது உள் ரகசியங்கள் முதலியவற்றையும் அறிந்திருக்க வேண்டும். இதற்கு மன்னனின் ஒற்றர்கள் திறமையுடன் செயல்பட்டுக் கொண்டிருப் பதுமிகமிக அவசியம்.

நியாயவர்த்தனன் விசாரித்த முதலாவது வழக்கில் குற்றவாளி வீரநந்தன் இடை நிலைப் பிரிவைச் சேர்ந்தவன். அவன் செய்த தவறுக்கு மன்னன் அளித்த தீர்ப்பு



பாராட்டத்தக்கதாய், நியாயசாஸ்திரங்களுக்கு ஏற்பப் புதுவிதமாக அமைந்திருந்தது.

அடுத்த வழக்கில் குற்றவாளி ரத்தின குப்தன். அவன் உயர்ரக நிலையைச் சேர்ந்த வனாதலால், அவனது விசாரணையும், அதற்கானதீர்ப்பும் வெளிப்படையாகத் தெரி யாமல் மறைவாகவே செய்யப்பட்டன. அவன் குற்றவாளி என்றோ, அவனுக்கு என்ன தண்டனை என்றோ மன்னன் கூறவில்லை. அதை வழக்கைத் தொடுத்த மணிகர்ணன் கூட தெரிந்து கொள்ள முடிய வில்லை. இவ் வழக்கில் நாட்டின் பிரமுகர் களில் ஒருவனான ரத்தின குப்தனின் வாழ்க் கையில் தனிப்பட்ட ரகசியங்களை அறிந்து கொண்டிருந்ததாலே இப்படிப்பட்ட தீர்ப் பை அளிக்க முடிந்தது. ரத்தின குப்தன்



வியாபாரியான மணிகர்ணனை ஏமாற்றி இருக்கக் கூடும் என்று ஊகித்து விட்டான். நேர்மையானவன் குற்றம் புரிந்தபின் அதை புரியவில்லை எனப் பேசாமல் இருப் பானேயொழிய தான் குற்றமற்றவன் எனக் காட்டக்கட்டுக்கதைகளைக்கூற மாட்டான். ஆனால், ரத்தின குப்தன் அவ்வாறு கூறியது தான் மன்னனின் சந்தேகத்தை வலுப்படுத் தியது. அதனால் தான் 'உன் மகன் ஹேமகுப்தன் நலமா?'' என்ற கேள்வியை மன்னன் ரத்தின குப்தனிடம் கேட்டான். அதைக் கேட்ட ரத்தின குப்தன் மன்னா என் மகனின் பொருட்டு நான்தான் குற்றம் புரிந்தவன் எனத் தெரிந்து கொண்டு விட்டான் என்று புரிந்து கொண்டான். அதனால் தான் அவனது முகம் சுண்டிப் போயிற்று. அதையும் கவனித்த மன்னன் அவனைக் குற்றவாளி எனத் தீர்மானித்துத் தனிமையில் போய் இருந்து யோசிக்கும் படிக் கூறினான். தன்மானமும் மனச்சாட்சி உறுத்தலும் கொண்ட ரத்தின குப்தன் மௌனமாக இருந்தே தன் குற்றத்தை ஒப்புக் கொண்டான். அவன் திரும்பி வந்ததும் மன்னன் அவனிடம் ''மணிகர்ணனையும் உன் மகனைப் போலக் கருது'' எனக் கூறியது ரத்தின குப்தனின் மனதில் உறைத்தது. மணிகர்ணனுக்கு அநியாயம் செய்யாதே எனக் குறிப்பால் மன்னன் தனக்கு உணர்த்தி இருப்பதாக ரத்தின குப்தன் புரிந்து கொண்டு விட்டான். மன்னன் வெளிப்படையாகத் தீர்ப்பு கூறித் தன்னை அவமானப்படுத்த வில்லை என்று அறிந்து கொண்டு ரத்தின குப்தன் மன்னனுக்கு நன்றி செலுத்தி விட்டு

தன்மானமுள்ளவன். எல்லோராலும் நேர் மையானவன் எனக் கருதப்பட்டவன். இப் படிப்பட்டவன் அயல்நாட்டவனை ஏமாற்ற ஏதாவது தக்க காரணம் இருக்கவே வேண்டும். அந்தக் காரணம் ரத்தினகுப்தனின் ஒரே மகனான ஹேமகுப்தன். கெட்ட சகவாசத்தால் அவன் தன் தந்தை சம்பாதித்துக் கொண்டிருந்த பணத்தை எல்லாம் ஊதாரித்தனமாகச் செலவு செய்து வந்தான். இப்படிப்பட்ட மகனை ஒரு தகப்பன் நல்வழிக்குக் கொண்டு வர முயல்வது இயல்பே. மகன் கட்டுக் கடங்காமல் போனால் அவன் மீது பாசம் கொண்டுள்ள தந்தை அவனது விருப்பத்தை நிறைவேற்ற எந்த வழியிலும் செல்வான்.

இதை எல்லாம் அறிந்திருந்த நியாயவர்த்தன மன்னன் ரத்தினகுப்தன் சட்டெனப் பணம் சம்பாதிக்க அயல்நாட்டு

மணிகர்ணனை அழைத்துக் கொண்டு தன் வீட்டிற்குச் சென்றான்.

வீட்டை அடைந்ததும் ரத்தின குப்தன் மணிகர்ணனின் பொருள்களை எல்லாம் திருப்பிக் கொடுத்தான். அவனுக்கு ரத்தின குப்தன் எல்லாவற்றையும் திருப்பிக் கொடுத்து விட்டானா என்றுதானே அறிந்து கொள்ளத் தான் மன்னன் மணிகர்ணனை மட்டும் மறுநாள் தனியே வரும்படிக் கூறினான். இவ்வாறு எல்லாமே மறைவாகவே செய்யப்பட்டு நல்ல தீர்ப்பு கிடைக்க வழி வகுக்கப்பட்டது.

அடுத்த வழக்கில் குற்றவாளி கிழவியே. அவள் மூன்றாவது வகையைச் சேர்ந்தவள். அதனால்தான் மன்னன் அவளுக்குக் கடும் தண்டனைவிதித்துச்சிறையில் அடைத்தான்.

நியாயசக்தியே! மூன்று வழக்குகளின் விமரிசனங்களை உனக்கு நான் கூறி விட்டேன். நான் கூறியது சரிதானே?'' இவ்வாறு விஜயதத்தன் கேட்டதும் அந்தப் பதுமையும் ''சபாஷ் இளவரசே! இந்த சிமமாசனத்தில் அமரத்தகுதி பெற்றவர் யார் என புலிந்த பட்டார்க்க மகான் காண விரும்பினார். அந்த அதிர்ஷ்டசாலி நீ தான். நீ இந்தத் தங்கச் சிம்மாசனத்தில் அமர்ந்து சக்கரவர்த்தியாகி, நல்ல விதமாக ஆட்சி புரிந்து நற்பெயர்பெறுவாயாக. இனி உனக்கு எவ்விதத் தடையும் இல்லை. நீ தாராளமாக இதில் அமரலாம். உனக்கு எம் நல் வாழ்த்துக்கள்!'' எனக் கூறியது.

அதைக் கேட்டதும் தர்பாரில் கூடி இருந்தவர்கள் யாவரும் ''இளவரசர்





விஜயதத்தர் வாழ்க!" என உரக்கக் கூறி கைதட்டி ஆர்ப்பரித்தார்கள். அப்போது விஜயதத்தன் அச்சிம்மாசனத்தில் மூன்றாவது படியையும் கடந்து சென்று அதனருகே சென்றான். அப்போது அச்சிம்மாசனத்தில் பொறிக்கப்பட்டிருந்த ஹைஹய வம்சத்துக் குல தெய்வமான காயத்திரிதேவியின் பாதங்களடியிலிருந்த தாமரை மலர் விரிந்தது. அந்தத் தாமரை மலரின் நடுவில் பதிக்கப்பட்டிருந்த சிவப்பு வைரக்கல் உடனே நவரத்தினங்கள் பதிக்கப் பட்ட பிடியுள்ள மந்திரவாளாக மாறியது.

அது கண்டு விஜயதத்தன் பரவசப்பட்டு குலதெய்வமான காயத்திரிதேவியை வணங்கி, சிவப்பு வைரக்கல்லிலிருந்து மாறிய மந்திரவாளை எடுத்துத் தன் கண்களில் ஒத்திக் கொண்டான். அப்போது விரிந்த தாமரை மலர் முன்போலாகி விட்டது. வேத விற்பன்னர்களும், சாஸ்திரி களும் வேத மந்திரங்களை முழக்கி, விஜயதத்தனுக்கு முறைப்படி பட்டாபிஷேகத்தை நடத்தினார்கள்.

அன்றிரவுதான் கிழமன்னன் ஸ்ரீதத்தன் நிம்மதியாக நன்கு தூங்கினான். விடியும் போது ஏதோ ஓசை உண்டானதைக் கேட்டு அவன் விழித்து எழுந்தான். அந்த ஓசை ஒரு புறாவினால் செய்யப்பட்டது. அந்தப் புறா முன்பும் ஸ்ரீதத்தனுக்குச் செய்தியைக் கொண்டு வந்து பழக்கப்பட்டதுதான். ஸ்ரீதத்தன் எழுந்து அதனருகே சென்று பரிவுடன் அதைத் தடவினான். அதன்பின் அதன் காலில் கட்டப் பட்டிருந்த செய்தி ஓலையை எடுத்துப் படித்தான்.

அதில் "தங்க சிம்மாசனத்தை அடைந்து விட்ட விஜய தத்தனுக்கு எம் உளங்கனிந்த வாழ்த்துக்கள்-மாதவசேனன், வசுமதி" என்று எழுதப்பட்டிருந்தது. அதைப் படித்து மகிழ்ந்து போன ஸ்ரீதத்தன் அதுபற்றித் தன் மகனுக்கும் மருமகளுக்கும் தெரிவித்தான்.

இதற்குச் சில நாட்களுக்குப் பின் திட்டமிட்டபடி காளிந்தி, சம்பகம், குந்தன நாடுகள் கௌண்டனிய நாட்டின் மீது படை எடுத்து வந்தன. போர் ஆரம்பமாகியது. முன்பே ரகசியமாக மாதவசேனன் கட்டளையிட்டிருந்தபடி காளிந்தி நாட்டுப் படை வீரர்கள் சம்பக நாட்டுப் படை வீரர்களைத் தாக்கினார்கள். இதைக் கண்ட குந்தன நாட்டுப் படை வீரர்கள் யாருடன் போர் புரிய வேண்டும் என்பது தெரியாமல்

திகைத்துப் போய் நின்றார்கள்.

தான் எதிர்ப்பார்த்தபடி தன் மாமானார் தனக்கு உதவி எதிரிகளைத் தாக்குவதைக் கண்ட விஜயதத்தன் மேலும் உற்சாகம் கொண்டான். தான் தன் குல தெய்வத்திடமிருந்து அடைந்த மந்திரவாளை உருவி எடுத்துக் கொண்டு தனது குதிரையை வேகமாகச் செலுத்திக் கொண்டு முன்னே சென்றான். இருட்டாகும் போது சம்பக நாட்டுப்படை அநேகமாக அழிந்து விட்டது. குந்தனநாட்டு சேனாதிபதி விஜயதத்தனிடம் சரணடைந்துவிட்டான். சம்பகநாட்டுமன்னன் மராளபூபதியும், அவனதுமகன்சக்கரபூபதியும் விஜயதத்தனிடம்சிக்கிச்சிறையுண்டனர்.

மாதவ சேனன் தயங்கித் தயங்கி விஜயதத்தனை அணுகி ''விஜயா! நான் செய்ததவறுகளைஎல்லாம்மன்னித்துவிடு'' என்றுகூறி கைகட்டித்தலை குனிந்து அவன் முன் நின்றான். விஜயதத்தனும் சிரித்தவாறே, ''மாமா! நடந்ததை எல்லாம் விட்டுத்தள்ளுங்கள். இனிமேல் இது உங்கள் வீடு. நான் உங்களில் ஒருவன். இதை நீங்கள் நினைவில் வைத்துக் கொண்டால் அது போதும்'' என்றான். அதிகம் கூறாமல் சில சொற்களிலேயே தன் நற்பண்பை வெளிப்படுத்திய விஜயதத்தனை மாதவசேனன் தன் மனதிற்குள் மெச்சியவாறே மௌனமாக நின்றான்.

இதற்குபின் விஜயதத்தன் பெரும் படையுடன் தென்திசையில் சென்றான். அப்போது அங்குள்ளநாடுகளில் கௌண்டனியமன்னன் விஜயத்ததன் சம்பகம், காளிந்தி, குந்தனம் ஆகிய நாடுகளை வென்று தன் நாட்டோடு சேர்த்துக் கொண்டு விட்ட செய்தி முன்பே பரவிவிட்டது. அதனால் அங்கிருந்த சிறிய நாடுகள் ஆள் சேதமும் பொருட்சேதமும் ஏற்படவிரும்பாமல்விஜயதத்தனுக்குக்கீழ்ப் படிந்துவிட்டன.

இவ்வாறாக விஜயதத்தன் பல நாடுகளை வென்று, கௌண்டனிய சாம்ராஜ்ஜியத்தை நிலை நிறுத்தி, அதன் பழங்கால புகழையும் பெருமையையும் யாவரும் உணரும்படிச் செய்ததோடு மாபெரும் சக்கரவர்த்தி என்ற பெயரோடு வெகுகாலம்ஆட்சி புரிந்தான்.

(முடிவுற்றது)





# போட்டோ வாக்கியப் போட்டி

தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.

**போட்டோ வாக்கியப் போட்டி**

(முகவரி கீழே தரப்பட்டுள்ளது)





போட்டிக்கான தலைப்புகளை தபால் கார்டில் எழுதி நவம்பர் 25-ம் தேதிக்குள் வந்து சேருமாறு அனுப்ப வேண்டும். போட்டியில் வெற்றி பெற்ற தலைப்புகள் ஜனவரி *2001* மாத இதழில் வெளியிடப்படும். சிறந்த தலைப்புகளுக்கு ரூ.*100/-* பரிசு

## வாழ்த்துக்கள்



**செப்டம்பர் 2000 போட்டியில் பரிசு பெற்றவர் :**

**கே. அருணா**

B-53C மயூர்விஹார் III,
எஸ்.எப்.எஸ். அப்பார்ட்மெண்ட்
புதுடில்லி - *110 096.*



**பரிசு பெற்ற தலைப்புகள்**

முதலாவதுபோட்டோ : உயிரற்ற உருவம் உற்ற துணை

இரண்டாவதுபோட்டோ : உயிருள்ள உருவம் உந்தன் துணை